# தமிழ் நாட்டுத்
# தவச்செல்வம்



ஸ (இந்தியா) லிமிடெட் சென்னை-1

# தமிழ்நாட்டுத் தவச்செல்வம்



வித்துவான் மா. ஆ. தேவராசன்,
தலைமைத் தமிழாசிரியர்,
போர்டு உயர்நிலைப் பள்ளி, ஊத்துக்கோட்டை.



புக்ஸ் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
135, பவழக்காரத் தெரு :: சென்னை - 1

# பதிப்பகம் பகர்வது

ஒரு நாட்டின் வளர்ச்சியும் முன்னேற்றமும் அந் நாட்டின் தொழில் வளம், மொழிநலம், பெண்களின் பெருமை, இளைஞர் எழுச்சி இவற்றை அடிப்படையாகக் கொள்வனவாகும். தமிழ்ப் பெரியார் திரு. வி. க. இத் துறைகளில் தம் வாழ்நாளெல்லாம் பணியாற்றியவர்; 'தொண்டு, தொண்டு, தொண்டு' என்று நாட்டுக்கே தம்மை உரிமையாக்கிய நல்லறிஞர்; சுருங்கக் கூறின் மனிதன் எவ்வாறு வாழவேண்டும் என்பதை வாழ்ந்து காட்டிய வழிகாட்டி — கலங்கரை விளக்கம் — கலியாணசுந்தரனார் அவர்களாவார்.

தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராய் 'என் கடன் பணிசெய்து கிடப்பதே' என்னும் இலட்சிய வீரராய் வாழ்ந்த தமிழ்த்தாயின் தவ மகனாராகிய அவர்தம் வாழ்வும் வாக்கும் எதிர்காலத் தலைவராகும் மாணவருலகிற்கு உறு துணை புரியும் என்னும் நோக்குடன் இந்நூல் எழுதப் பெற்றுள்ளது. மாணவர்கள் தமிழ்ப் பெரியார் தாமே எழுதிய திரு. வி. க. வாழ்க்கைக் குறிப்புக்கள் என்னும் பெரு நூலைப் பயில்வதற்கும் இச்சிறு நூல் தூண்டுகோலாக இருக்குமென நம்புகிறோம்.

இந் நூலினைத் தமக்கு இயல்பான சொல்லழகும் பொருளழகும் பொருந்திய இனிய நடையில் எழுதியுதவிய வித்துவான் திருவத்திபுரம் மா. ஆ. தேவராசன் அவர்களுக்கும் இந்நூலின் அச்சுப் பிரதிகளையும் கையெழுத்துப் பிரதிகளையும் ஒப்பு நோக்கித் திருத்தம் செய்துதவிய சென்னை இந்து தியலாஜிகல் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர், வித்துவான் தணிகை. உலகநாதன் அவர்களுக்கும் எங்கள் நன்றி என்றும் உரியதாகும்.

கல்வியுலகம் இதனை ஏற்றருளி ஆதரிக்குமென்று நம்புகிறோம்.

—பதிப்பகத்தார்

## பொருளடக்கம்

# தமிழ் நாட்டுத் தவச் செல்வம்

## 1. துவக்கம்

கல்விக் களஞ்சியமாய்த் தமிழ்த்தாயின் கண் மணியாய் விளங்கிய தமிழ்ப் பெரியார் திரு. வி. க. அவர்களின் அருமை பெருமைகளை அறியாத தமிழர் கள் இலர். அவர்தம் சீரிய வாழ்வு தமிழ் மக்களுக்கு ஒரு கலங்கரை விளக்கமாகும். தமிழ் மொழியின் வளர்ச்சி, தொழிலாளர் முன்னேற்றம், பெண்மணி கள் நல்வாழ்வு, இளைஞர்களின் எழுச்சி ஆகியவற் றின் பெருந்துணைவராய் விளங்கியவர் திரு. வி. கலி யாண சுந்தரனார் அவர்கள். அவர்தம் இனிய எழுத் தும் பேச்சும் தூங்கியிருந்த தமிழ்மக்களைத் தட்டி எழுப்பிச் செயலாற்றுமாறு தூண்டின. அறவாழி அந்தணராக வாழ்ந்த அவர்தம் அரிய பெரிய சேவை களைப் பாராட்டியே தமிழர்கள் அவரைத் தமிழ்ப் பெரியார், தமிழ்நாட்டுக் காந்தியடிகள், தமிழ் முனிவர், தொழிலாளர் தந்தை, சமரச ஞானி என்று பலவாறு மனங்குளிர, வாய்குளிரப் போற்றிப் புகழ்ந்தார்கள்.

தமிழ்ப் பெரியார் அவர்கள் வெறும் தமிழறிஞ ராக மட்டும் வாழ்ந்துவிடாமல் பல துறைகளிலும் ஈடுபட்டுப் பணியாற்றியவராவர். பல துறைகளைச் சார்ந்த மக்களின் தொடர்பும் அவருக்கு உண்டு. சென்ற 1943-ஆம் ஆண்டில் திரு. வி. க. அவர்களின் மணிவிழாவை அனைவரும் கொண்டாடினர். துறவி

கள், இல்வாழ்வோர், செல்வர், வறிஞர், தொழிலாளர்கள், முதலாளிகள், எழுத்தாளர்கள், அரசியல் கட்சியினர், சமயவாதிகள் ஆகிய பல திறத்தினரும் அவர்தம் மாண்புகளைப் பாராட்டி மணிவிழாக்கள் நடத்தி மகிழ்ந்தனர். இந் நிகழ்ச்சி யொன்றே நம் தமிழ்ப் பெரியார் அவர்கள்பால் தமிழ்மக்களுக் கிருக்கும் பற்றும் பெருமதிப்பும் விளக்கும் சிறந்த சான்றாகும். மணிவிழா நிகழ்ச்சிகளையொட்டிப் பல மணிவிழா மலர்கள் வெளியிடப்பெற்றன; செய்தித் தாள்களில் அவரது சேவைகளைப்பற்றிய செய்திகள் வெளியிடப் பெற்றன. திரு. வி. க. அவர்கள் மணிவிழா நிகழ்ச்சி சென்னையில் பல நாட்களும், தமிழகம் முழுவதும் வெளி நாடுகளிலுமாக ஏறத்தாழ ஆறு மாத காலம் வரையிலும் நிகழ்ந்தது.

மாணவர் போற்றும் மணிவிளக்காகத் திகழ்ந்த கலியாண சுந்தரனாரின் வாழ்க்கை வரலாறு அனைவரும் அறிந்து போற்றுவதற் குரியதாகும். தன்னலமற்ற தமிழ்ப் பெரியார் அவர்கள், 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்னும் சீரிய கொள்கையினையே சிரமேற் கொண்டு வாழ்ந்தவர் ஆவர். அவர் ஐம்பதுக்கு மேற்பட்ட இனிய தமிழ் உரைநடை நூல்களும் கவிதை நூல்களும் இயற்றியுள்ளார். திரு. வி. க. அவர்கள் வாழ்ந்த வாழ்வைப் பின்பற்றி, கொள்கைகளைக் கடைப் பிடித்து வாழ்வோர் அவரைப் போலவே நாட்டினர் புகழும் நன்மக்களாய் வாழ்வர் என்பதில் ஐயமில்லை. அந்தண்மை நிறைந்த அண்ணலாரின் வரலாற்றை உணரும் மாணவர்கள் அவர்தம் நூல்களில் கூறப்படும் பொன் மொழிகளையும் உணர்ந்து தம் வாழ்வில் மேற்கொள்வது நலமாகும்.

## 2. துள்ளம் வழங்கிய வள்ளல்

கலியாண சுந்தரனாரின் முன்னோர்கள் திருவாரூரில் வாழ்ந்தமையால் 'திரு' என்னும் அழகிய தமிழ்ச் சொல் அவர் பெயருக்கு முன்னணியாக அமைந்தது. தமிழ்ப் பெரியாரின் பாட்டனாராகிய வேங்கடாசல முதலியார் அவர்கள் சென்னைக்குப் போந்து இராயப்பேட்டையைச் சார்ந்த புதுப்பேட்டையில் வாழ்ந்து வந்தார். திரு. வி. க. வின் தந்தையார் விருத்தாசல முதலியார் இலக்கியப் பயிற்சியும் இசைப் பயிற்சியும் நிறைந்தவர். அவர்,

> "இருந்தமிழே உன்னா லிருந்தேன் இமையோர்
> விருந்தமிழ்தம் என்றாலும் வேண்டேன்"

என்னும் புலவர் மனம் படைத்தவர். ஆகையால் ஆங்கிலத்தில் அவருக்கு ஆர்வம் பிறக்கவில்லை. அருந் தமிழ்க் கல்வியிலேயே அவர் மனம் பொருந்தி இருந்தது. அவர்தம் தமிழ்க்கல்வி யார்வத்தினால் ஒருசிறிய தமிழ்ப் பள்ளிக்கூடமும் நடத்தி வந்தார். ஆசிரியத் தொழிலுடன் அவர் வாணிபத்தின் வழியாகவும் பொருள் திரட்டினார். அவருக்குப் பலதிறத் தொழில்களும் தெரியுமாயினும் வாணிபத்திலேயே பெரும் பொழுதைக் கழித்து வந்தார்.

திரு. விருத்தாசலனார் தம் அண்ணியாரின் அருமைத் தங்கையான பச்சையம்மாள் என்பவரை மணம் புரிந்துகொண்டார். பச்சையம்மாள் மூன்று மைந்தரையும் ஒரு மகளையும் பெற்றார். அவர் நிலவுலகில் நெடுங்காலம் வாழவில்லை. இளம் பருவத்திலேயே அவர் கொடிய சுரத்தினால் மறைந்தார். பின்னர் விருத்

தாசலனூர் மரக்காணம் திரு. வேங்கடாசலம் அவர்களின் தவமகளாகிய சின்னம்மையாரைத் தம் இரண்டாம் துணைவியாக மணந்துகொண்டார். காதலர் இருவரும் கருத்தொருமித்து ஆதரவு மிக்க இல்லறவாழ்வை நடத்தி வந்தனர். அவர்கட்கு முருகேசன், அம்மணியம்மை, தாயாரம்மை, விருத்தாம்பாள் என்னும் மக்கள் பிறந்தனர். அவர்களுள் முருகேசனும் விருத்தாம்பாளும் இளமையிலேயே உயிர் நீத்தனர். அதனால் தம் இளைய மனைவிக்கு ஆண் மகவு இல்லாக்குறை விருத்தாசலனூர் உள்ளத்துக்கு வேதனை அளித்து வந்தது.

இராயப்பேட்டையில் விருத்தாசலனூர் ஓர் அரிசி மண்டி வைத்து வாணிபம் செய்து வந்தார். அவ்வமயம் சென்னைக்கு அண்மையில் உள்ள செம்பரம்பாக்கத்து ஏரியைச் செப்பனிடும் ஒப்பந்தத்தில் கலந்துகொள்ள முயன்றுஅம்முயற்சியில்வெற்றியும் பெற்றார்.

ஏரியைச் செப்பனிடும் பணியை ஏற்றுச் செய்து வரும் காலத்தில் ஒருநாள் விருத்தாசலனூருக்கு அவர் தம் அண்ணலாரிடமிருந்து ஒரு முடங்கல் வந்தது. அதில் அவர்கள் குடும்பச் சொத்துப் பிரிவினையைப் பற்றிக் குறிப்பிடப்பட்டிருந்தது. அக்கடிதத்துக்குத் தம் இசைவினை விருத்தாசலனூர் மறு கடிதத்தின் மூலம் தெரிவித்தார். அவரது ஒப்புதலைப் பெற்ற தமையனூர் செய்ய வேண்டுவனவற்றை விரைவில் செய்து பத்திரமும் எழுதி முடித்தார். தம் தம்பியாரை அழைத்து அதில் கையொப்பமிடுமாறு பணித்தார்.

விருத்தாசலனூர் பத்திரத்தைப படித்துப் பார்த்தார். தமக்கு வருத்தம் தரத்தக்க நிபந்தனை யொன்று அதில் இருக்கக்கண்டு மனம் புழுங்கினூர்.அதில் தம் ஆயுளுக்குப் பின்னர் தம் மூத்த மனைவியின் மக்களுக்கே

சொத்தெல்லாம் உரிமையாக்கப்பட்டிருக்கக் கண்டார். தம் இளைய மனைவிக்கு ஆண் மக்கள் இல்லாமையால் அவ்வாறு எழுதப்பட்டிருந்ததாக அறிந்தார். பிற்காலத்தில் பிறக்கும் குழந்தைகளுக்கும் சொத்துரிமை பறிக்கப் பட்டிருப்பதை அவர் விரும்பவில்லை. எனினும், 'மூத்தோர் சொல் வார்த்தை அமிழ்தம்' எனக் கருதி தம் வருத்தத்தை வெளிக்குக் காட்டாமல் பத்திரத்தில் கையொப்பமிட்டுத் தம் பணிமேற் சென்றார். ஏரி வேலையும் சின்னாளில் இனிது முடிந்தது. இடையே அவர் உள்ளத்தில் பத்திரத்தினால் ஏற்பட்ட வெறுப்பு, எங்கேனும் ஒரு சிற்றூரில் தங்கி வாழ வேண்டுமென்னும் ஓர் உறுதியான எண்ணமாய் உருப்பெற்று வளர்ந்தது. நாதமுனி என்னும் தம் நண்பரொருவர் தூண்டுதலால் விருத்தாசலனார் செங்கற்பட்டு மாவட்டத்தில் சைதாப்பேட்டையைச் சார்ந்த துள்ளம் என்னும் சிற்றூரில் குடியேறினார். நூம்பல், செட்டியாவரம் என்னும் இரு கிராமங்களுக்கு இடையே துள்ளம், உள்ளது.

துள்ளம் கிராமத்தில் கண்ணன் கோயிலருகே ஓரன்பர் நிலத்தில் பனையோலை வேய்ந்த குடில் ஒன்றும், ஊர்க்குளத்தருகேயுள்ள ஆலமரத்தடியில் பிறிதொன்றும் கட்டப்பட்டன. விருத்தாசல முதலியார் முன்னதில் குடும்பமும் பின்னதில் வாணிபமும் நடத்தலானார். அருங்குணங்களின் உறைவிடமான முதலியார் அவர்களின் வாணிபம் தொடங்குங்கால் துன்பமாக இருப்பினும் பின்னர் இன்பம் அளிக்கத்தக்கதாக இருந்தது. அவர் பெருந்தன்மையை விரும்பி ஊரிலுள்ளார் பலர் அவருக்கு நண்பராயினர். வர வர அவரது செல்வாக்கும் வளரலாயிற்று. அக்காலத்தில் நூம்பல் கிராமத்தில் அமீனாவாக இருந்த முனிசாமிப் பிள்ளை

என்பவர் முதலியாரிடம் பெருமதிப்புக் காட்டி நெருங்கிப் பழகி வந்தார். பிள்ளையவர்களின் நட்பு முதலியாருக்குப் பெரும்பயன் அளித்தது. அவர் அச் சுற்றுப்புறங்களில் அதிகாரமும் ஆற்றலும் மிக்கவராய் இருந்தார்.

அமீனாவின் தொடர்பால் விருத்தாசலனாருக்குச் சுற்றுப்புறங்களில் வாழும் மக்களின் அன்பும் ஆதரவும் கிடைத்தன. அவரது புகழ் பரவுவது கண்டு அழுக்காறு கொண்ட வணிகன் ஒருவன் ஏவுதலினால் செந்தீக் கடவுள் விருத்தாசலனாரின் கடையை உண்டு மகிழ்ந்தார். அற்பனின் செயலைச் செவிமடுத்த முனிசாமிப் பிள்ளையின் உள்ளத்தில் சினத்தீ மூண்டது. குணக்குன்றாகிய முதலியார் அவர்கள், அமீனாவின் கோபத்தைத் தணித்தார். அவர் தம் பகைவனுக்கும் அருள் புரியும் தகைமையை உணர்ந்த கிராமத்தார் யாவரும் இரக்கம் கொண்டு அவர் தம் இல்லத்தின் முற்பகுதியில் தொடங்கப்பெற்ற அவரது கடையிலேயே பொருள் வாங்கி ஆதரிக்கலாயினர்.

> " அறனறிந்து வெஃகா அறிவுடையார்ச் சேரும்
> திறனறிந்து ஆங்கே திரு "

என்னும் பொய்யாமொழி மெய்யாயிற்று. முதலியார் அவர்களின் வாணிபம் வளர்ந்தது; செல்வம் திரண்டது. அவருக்கு நிலபுலங்களும் பலவளங்களும் நிறைந்தன.

ஏரி நிறைந்தனைய செல்வரேபோல விருத்தாசலனார் வாழ்ந்து வரும் நாளில் அவருக்கு 1881-ஆம் ஆண்டு, செப்டம்பர்த் திங்கள் பன்னிரண்டாம் நாளில் பரணி ஓரையில் திரு. வி. உலகநாதர் என்னும் மைந்தர் பிறந்தார். உலகநாதரைப் பெற்ற பெற்றோர் உவகைக் கடலில் ஆழ்ந்தனர். இரண்டாண்டுகளின் பின்னர்

பெற்றோரைப் பேரின்பக் கரைக்கு ஏற்ற 1883-ஆம் ஆண்டு ஆகஸ்டுத் திங்கள் இருபத்தாறும் நாள் ஞாயிற்றுக்கிழமையன்று சமரச சன்மார்க்கத் தமிழ் ஞாயிறே யாகிய நம் திரு. வி. க. அவர்கள் உலகு உய்ய வந்து உதித்தார்.

திரு. வி. கலியாண சுந்தரம் தம் பெற்றோர்க்கு ஆறும் பேருய் அவதரித்தார். அவருக்குப் பின் பிறந்தவர் இருவர். எனவே விருத்தாசலனார் முதல் மனைவியின்பால் நால்வரும், இரண்டாம் மனைவியின்பால் எண்மரும் ஆகப் பன்னிருவர் மக்களாய்த் தோன்றினர். அவர்களையெல்லாம் நன்முறையில் வளர்த்துப் பெருவாழ்வு வாழ்ந்தவர் விருத்தாசலனார்.

"இத் தவமகனைப் பெற இவன் தந்தை எத் தவம் புரிந்தானோ?" என்று வியந்து நயந்துரைக்குமாறு தந்தைக்கு நன்றி ஆற்றியவர்களில் நம் திரு. வி.க.வே தலை சிறந்தவர். இவர் ஆறும் பேருய்த் தோன்றியவர். திரு. வி. க. வின் வலக் காலடியில் ஆறு விரல்கள் அமைந்ததும் ஒரு வியப்பே. "ஆறும்பேறு ஆனை கட்டி வாழும்" என்பது பழமொழி. ஆனால் திரு. வி. க. ஆனைகட்டித் தீனிபோடும் அளவுக்குப் பொருள் வளம் பெறவில்லை. 'ஆனை கட்டி வாழும் என்ற பழமொழியைப் பழி மொழியாக்கவுமில்லை. "**ஆறும்பேறு ஆணை கூட்டி வாழும்**" என்று அதைப் புதுமொழியாய்ப் புதுக்கினர். திரு. வி. க. ஏறத்தாழ 13,000 தொழிலாளர்களையும் இலட்சக்கணக்கான தமிழர்களையும், தாம் ஆட்டும் இடக்கை *இருவிரல் கண்டு ஆடுமாறு ஆணை கூட்டியவர் என்பதில் எட்டுணையும் ஐயமில்லையன்றோ?

* சுட்டு விரலையும் நடுவிரலையும் நீட்டி மும்முறை ஆட்டித் தம் கருத்தை உறுதிசெய்வது திரு. வி. க. அவர்களின் பழக்கம்.

## 3. கள்ளமறியாப் பிள்ளைமை

கள்ளமறியாத உள்ளமுடையது பிள்ளைமைப் பருவம். அதனால்தான் முன்னோர், "குழந்தையும் தெய்வமும் கொண்டாடும் இடத்து" என்றும், "குழவி தளர்நடை காண்டல் மிக இனிது" என்றும் கூறியுள்ளனர். "குழலினிது யாழினிது என்ப; தம் மக்கள் மழலைச் சொல் கேளாதவர்" என்றனர் வள்ளுவரும். இத்தகைய அன்பின் எழிலுருவாகிய இளங் குழந்தைகளைப் பார்த்துப் பாரதியாரும், "ஓடி விளையாடு பாப்பா—நீ ஓய்ந்திருக்கலாகாது பாப்பா," என்று பாடி ஊக்கினரல்லவா? தீராத விளையாட்டுப் பிள்ளையாய், தெருவினில் பெண்கட்கு ஓயாத தொல்லை தருபவனாய்க் கண்ணனும் ஆடியுள்ளனன் அன்றோ? நம் திரு. வி. க.வும் இளமையில் புரிந்த குறும்புகளைச் சிறிது இங்குத் தெரிந்து கொள்வோம்.

### அஞ்சா நெஞ்சம்

திரு. வி.க.வின் பாட்டியார் குழந்தைகளைக் காணத் துள்ளம் வரும்போதெல்லாம் திரு.வி.க.விற்கு மகிழ்ச்சி துள்ளும். தம் பாட்டியார் வாங்கிவரும் விளையாட்டுப் பொருள்களிலிருந்தும் தின்பண்டப் பொருள்களிலிருந்தும் தமக்கு வேண்டியவற்றை யெல்லாம் தாமே முதலில் எடுத்துக்கொள்வது திரு. வி. க.வழக்கம். தவறித் தமையனார் எடுக்கக் கண்டால் அவரைச் சண்டைக்கிழுத்து வெற்றி பெறுவார். தந்தையார் கடிந்தாலும் தடிந்தாலும் திரு. வி. க. அஞ்சுவதில்லை. இவ்வஞ்சாமையே பின்னாளில் கொடுங்கோலன் கவர்னர் வெல்லிங்டனை கண்டும், "அஞ்சுவது யாதொன்றும் இல்லை;

அஞ்ச வருவதும் இல்லை" என்ற வீரவுரையை விளம்ப வைத்தது போலும்!

## பாட்டனர் பேரன்பு

சின்னசாமி பெரியசாமியென அழைக்கப்பெற்ற இச் சகோதரர்களில், "மூத்தது மோழை; இளையது காளை" என்ற பழமொழிப்படி இளவல் திரு. வி. க. வே பிடிவாதம் முதற்கொண்டு பல துறையிலும் தலைசிறந் திலங்கினர். இவர், தம் பாட்டனருக்கு எல்லையற்ற தொல்லையளித்து வந்தார். "கடந்த முனிவரும் கடப் பரோ மக்கள் மேல் காதல்?" என்னும் கவியரசர் கம்பர் வாக்கை மெய்யாக்கித் திரு. வி. க.வின் பாட்டனர், திரு. வி. க. தந்த அவ்வளவு தொல்லைக்கும் அடங்கிச் செந்தமிழால் வைதாரையும் அங்கு வாழ வைப்பவராய் வாழ்ந்தார்.

## விளையாட்டுக்களில் விருப்பம் மிக்கவர்

கோலி விளையாடல், காற்றாடி விடுதல், பாரிகுந்தம் அடித்தல், பாறு சுழற்றல், ஏழாங்காய், சோழி, தாயம், சதுரங்கம் ஆடுதல், சடுகுடு, புள்ளாட்டம் முதலிய பல விளையாடல்களிலும் திரு. வி. க. கழி மகிழ்வு கொண்டு தம்மையொத்த இளைஞர்களோடு கலந்து ஆடி வந்தார்.

## பாம்பை மிதிக்கும் பருவம்

இளங்கன்று பயமறியாதன்றோ? 'விரித்த படம் எடுத்து அரவு' கடிக்க வரும்போது விளையாட்டுப் பண்டமெனச் சிறுவர்கள் அதைக் கருதுவது இயல்பே. 'பாம்பென்றால் படையும் நடுங்கும்'. ஆனால் திரு. வி. க.

நாகத்தைக் கண்டு நடுங்கவில்லை. "அரவமாட்டேல்" என்ற அவ்வையின் அருமொழியை அறியாத வயது. "காக்கை குருவி எங்கள் சாதி;—கடலும் மலையு மெங்கள் கூட்டம்;—அவற்றை நோக்க நோக்கக் களி யாட்டம்" கொள்ளும் பிள்ளைமைப் பருவம். திரு.வி.க. உள்ளம் பாம்பையும் தம்மொடுசேர்த்துக்கொண்டாட விரும்பிற்று. ஒருமுறை தம் வீட்டுத் தோட்டத்தில் இரண்டு நல்ல பாம்புகள் இவர் விளையாடும் இடம் நோக்கி ஊர்ந்து வந்தன. உடன் விளையாடியவர்கள் ஓடிப்போயினர். திரு. வி. க.வோ நல்லபாம்பை நல்ல பாம்பென்றே கருதிக் கலங்காது, அப்பாம்புகளைப் பற்றப் புற்றைத் தோண்டிக் கொண்டிருந்த இருளர்கள் அருகிலேயே நின்றிருந்தார். பெற்றோர் கண்டித்தும் அவர்களையும் ஏமாற்றிவிட்டுத் தெருவில் இருளர்கள் பாம்பைக்காட்டி அரிசி வாங்கிக்கொண்டிருந்த இடத் தை அடைந்தார். எல்லோரும் ஏமாந்திருந்த சமயத்தில் எப்படியாவது பாம்பின் மெல்லிய தண்ணிய பட்டுடலைத் தொட்டுப் பார்க்கவேண்டும் என்று உறுதிகொண் டார். திண்ணிய தாயின் எண்ணம் நிறைவேறும் அன்றோ? சமயம் வந்தது. பாம்பைக் காலால் மிதித் தார்; பரவசத்தால் குதித்தார். திரு. வி. க.வின் தந்தை இதைப் பார்த்துப் பதறி அவரை தூக்கிக்கொண்டார்.

## நீர்த் தத்து

மற்றொரு முறை தந்தையார் வழக்கம்போல் குளிப்பதற்காகக் குளக்கரைக்குச் சென்றார். அம் முறை திரு. வி. க. வும் உடன் சென்றார். மைந்தனைக் கரையில் இருக்க வைத்துவிட்டு, தந்தையார் நீரில் மூழ்கி நீராடலானார். திரு. வி. க. தாமும் தந்தையைப்

போல நீராட நினைத்தார் ; விரைந்தார் ; நீரிலிறங்கி நடுக் குளத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார் ; கழுத்தளவு நீர் வந்துவிட்டது. அருகில் ஏற்றம் இறைப்போர் இந்நிலையைப் பார்த்துக் கூவினர். அக் குரல், திரு. வி. க.வை வாழ்வித்தது. திரு. விருத்தாசலனார் சிறுவனைத் தூக்கிக்கொண்டார். அதுமுதல் திரு. வி. கலியாண சுந்தரனாருக்குக் குளம் செல்லும் விருப்பம் அறவே ஒழிந்தது.

திண்ணையினின்றும் வீழந்து புண்ணுறல்

மற்றொரு சமயம் திரு. வி. க. திண்ணைமேலிருந்து கோலியாட்டம் ஆடிக்கொண்டிருந்தார். கோலி கீழே தவறி விழுந்தது. அதை எடுக்கத் திண்ணையின் படி வழியே நண்பன் இறங்கத் திரு. வி. க. அவனுக்கு முன் சென்று தாமே எடுக்கத் திண்ணையில் இருந்து கீழே குதித்தார். உதட்டிலும் நெற்றியிலும் காயம் பட்டது. புண்ணுக்கு மருந்திட்டுக்கொண்டு மீண்டும் அத் திண்ணையிலேயே வந்து ஆடத்தொடங்கினார்.

மரமேறி வீழ்தல்

பிறிதொரு நாள் நம் கலியாண சுந்தரனார் தோட்டத்தில் உள்ள கொன்றை மரத்தில் சிக்கிக்கொண்டிருந்த பட்டம் (காற்றாடி) ஒன்றைச் சிறுவர்கள் பலர் எடுக்க முயன்று தோல்வியுற்றுத் திரும்பியதைக் கண்டார். "முடியாதது என்பது என் அகராதியிலேயே இல்லாததொரு வார்த்தை" என்று நெப்போலியன் வயதுவந்த பின்னாளில் கூறியிருந்தான். அதைத் திரு. வி. க. இளமையிலேயே நினைத்தார். பெருமுயற்சி செய்து காற்றாடியை எடுக்கக் கொன்றை மரத்தில் ஏறி நின்றார். பட்டம் அவர் கையிற்பட்டது. அந்நிலையில்

தோட்டத்துக்கு வந்த அவர் தாயார் சுந்தரத்தைப் பார்த்துப்பதறினர். "அடா, அடா" என்று கதறினர். இடியோசை கேட்ட நாகம்போல் ஆனர் திரு. வி. க. கிளையில் பற்றியிருந்த தம் பிடியைத் தளர்த்தினர்.

> "நுனிக்கொம்பர் ஏறினர் அஃது இறந்து ஊக்கின்
> உயிர்க்கு இறுதி ஆகிவிடும்"

என்பது தமிழ்மறை. கீழே வீழ்ந்தார்; விழுந்தபோது முறிந்ததொரு கிளையின் கூர்மை இவரது இடப்பக்க விலாவில் அக்குளிலிருந்து இடுப்புவரை கிழித்துத் தன்னை ஒடித்ததற்குப் பழி வாங்கிவிட்டது. அந்நிலையிலும் தாயார்க்கு அஞ்சி ஓடி ஒரு புதர்க்கண் ஒளிந்துகொண்டார். அவரைத் தேடிப் பிடித்துச் சுற்றத்தார் தக்க மருந்திட்டுப் பணி புரிந்தனர். ஆயினும் யாவரும் அழுதனர். பச்சிலை மருந்தினல் இரணம் பத்து நாளில் குணமாயிற்று. அதனல் ஏற்பட்ட கீறல்வடு மட்டும் இறுதிவரைக்கும் மாறவே இல்லை.

### தெய்வலோகக் கற்பனை

திரு. வி. க. வைப் பார்க்கவந்த பாட்டியார் வலக்காலில் வந்த கட்டியின் துன்பத்தால் பலநாள் கழித்து உயிர் நீத்தார். பாட்டி இறந்ததைப் பற்றிப் பாட்டியின் தங்கையார் "பாட்டி எங்கே?" என்று ஒரு முறை சுந்தரரைக் கேட்டார். "தெய்வலோகம் போனர்" என்று விடையளித்தார் சுந்தரர்.

அதுகேட்ட சிறிய பாட்டி, "தெய்வலோகம் எப்படி இருக்கும்?" என்றார். "தெய்வலோகம் பளபளவென்றிருக்கும், அங்கே மாடிகள் வரிசை வரிசையாயிருக்கும். பாதைகளில் தார் பூசப்பட்டிருக்கும். தார் மீது மணல் தூவப்பட்டிருக்கும்" என்ற பதிலைத்

திரு. வி. க. வாய் மொழிந்தது. பார்த்தும், கேட்டும் அறியாத தெய்வலோகக் கற்பனையே திரு. வி. க.வின் பின்னாளைய கவிதா சக்திக்கும் கற்பனை ஊற்றுக்கும் அடிவேராயிற்று போலும்!

## அமீனா கொம்பு முளைத்தவரா?

முன்னர்க் கூறப்பட்ட அமீனா முனுசாமி, தெரு வழியே ஒருநாள் வந்தார். அவ்வேளையில் திரு. வி. க. சிறுவர்களுடன் தெருவில் விளையாடிக் கொண்டிருந்தார். தெருவில் இருந்த பெரியோர்களும் எழுந்து நின்று மரியாதை செலுத்தினர். பெண்கள் வீடுகளில் புகுந்து மறைந்தனர். உடன் ஆடியிருந்த இளைஞர்கள் மூலைமுடுக்குகளில் உடனே ஓடி ஒளிந்தனர். ஹைதர் அலி வருவதுபோலிருந்தது அந்தக் காட்சி. ஆனால் திரு. வி. க. ஓடிய சிறுவர்களைக் கூவியழைத்தார். "ஏன் ஓடுகிறீர்கள்? அமீனாவுக்குக் கொம்பா முளைத்திருக்கிறது?" என்று வினவினார். இவ் வினாவினைக் கேட்ட அமீனா, திரு. வி. க. அருகில் வந்தார்; சுந்தரத்தின் கரத்தைப் பற்றிக் கொண்டார்; அருகிலிருந்தவர் மூலம், சுந்தரத்தின் தந்தையை அறிந்துகொண்டார். அவர், தம் நண்பரா யிருப்பதறிந்து மகிழ்ந்தார். "மனந்தூயார்க்கு எச்சம் நன்றாகும்" என்பதுணர்ந்து, திரு. விருத்தாசலனாரிடம் சென்று திரு. வி. க.வைப் பலபடப் புகழ்ந்து கூறி அவரை நன்கு பயிற்றுவிக்குமாறு ஊக்கிச் சென்றார்.

## அப்புவுக்கு அஞ்சுதல்

இவ்வாறு எவர்க்கும் அஞ்சாத திரு. வி. க. வானுற ஓங்கி வளர்ந்த நெடும்பனையின் உச்சியிற்

சென்று குலைகளையும் இலைகளையும் வெட்டி வீழ்த்தி வந்த அப்பு என்பவரிடம் மட்டும் சில ஆண்டுகள் பயங் கொண்டிருந்தார். துடுக்குத்தனம் சுந்தரனரிடம் அள வைக் கடக்கும்போது எல்லாம் அவரை அடக்க அப்பு என்ற சொல் ஒப்பிலா மருந்தாய்ப் பயன்பட்டது. பழக் கம் பயத்தை ஒழிக்கும் அன்றோ? நாளடைவில் படிப் படியே அப்பு என்பவர்க்கும் சுந்தரர் அஞ்சவில்லை.

## உயிரிரக்க உளம்

திரு. வி. க. 'தன்னுயிர்போல மன்னுயிர் ஓம்புக' என்னும் முதுமொழியை ஓதாதுணர்ந்த மேதை. பொன்வண்டு, தும்பி முதலியவற்றைப் பிடித்து, அவற் றின் கழுத்திலும், வாலிலும் முறையே கயிற்றைக் கட்டியும் துடைப்பம் நுழைத்தும் வருத்தி விளையாடும் பிள்ளைகள் பலர் இவர்தம் தோழராயிருந்தனர். அவர் களைத் திரு. வி. க. அச் செய்கை கொடிது எனக் கூறி எதிர்ப்பார்; சிற்றுயிர்களிடம் அன்பு வேண்டும் என் பார். அவ்வுயிர்களை அக்கொடியவர் கையினின்றும் விடுவிப்பார். இவ்வுயரிய பண்பே பின்னளில் திரு. வி. க.வை எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகும் அந்தண்மைச் செல்வம் உடையவராக்கியது எனலாம்.

## அடித்து நொறுக்கினர்

ஆனவர் ஆகாதவர் என்ற பாகுபாடு தம் நண்ப ரிடையேயும் சிறுவயதில் கொண்டிருந்த திரு. வி. க. ஒரு சமயம் தம் கையிலிருந்த தின்பண்டத்தைப் பிடுங் கிக் கொண்டோடிய ஒரு சிறுவனைப் பிற்பகல் விளை யாட வந்தபோது தம் தோழருடன் கூடி அடித்து நொறுக்கினர். இவர், தம் தமையனர் தோட்டங்களை

யாருமில்லாத நேரம் பார்த்து அழித்தொழிப்பார். ஒருமுறை தம்மொடு தாயம் விளையாடிய நக்காவரதன் என்பவனுடன் விளையாட்டை ஒட்டி விளைந்த வாது வளர்ந்தது. திரு. வி. க. வரதனைக் கன்னத்திலறைந்தார். வரதன் தந்தையார் அதைக் கண்டு விரைந்தார். திரு. வி. க. கணத்தில் அங்கிருந்து மறைந்தார். ஒருநாளிரவு தன்னந்தனியே தெருவழியே சென்ற வரதனின்-தந்தை முதுகை நோக்கிக் கல்லெறிந்துவிட்டு ஓடித் தம் வீட்டுள் ஒளிந்தார். தம் வீட்டுள் சிறுவர்களை நுழையவிடாத காஞ்சான் என்ற கிழவர்பால் திரு.வி.க. விற்குக் காழ்ப்பு இருந்தது. ஒருமுறை இரவில் ஒரு பாட்டுக் கச்சேரி நிகழ்ந்தது. அதற்குச் சென்றிருந்த காஞ்சான் கிழவர், இடையே எழுந்து வெளியே தனியே போனார். அக்கிழவரை வாழைப்பட்டையால் தம் மனமாரச் சாடிவிட்டு ஓடினர் திரு. வி. க. மற்றொரு கிழவர் சிறுவர்களின் பரம வைரியாயிருந்தார். சிறுவர் விளையாட்டைப் பலமுறை கலைத்துவந்த இக்கிழவரைச் சிவராத்திரியன்று சோமசுந்தரனார் செய்த ஒரு சைவச் சொற்பொழிவு கேட்டுவிட்டுத் தனியே திரும்பியபோது திரு. வி. க. தம் தோழர்களுடன் கூடித் தாக்கிக் கீழே தள்ளிவிட்டு மறைந்தார். விளையாட்டில் ஒருமுறை நடுவில் எழுந்துபோக விரும்பிய குருபாதம் என்ற நண்பருடன் சண்டையிட்டார். அது முதல் திரு. வி. க. அவருடன் பல்லாண்டுகள் வரை சொல்லாடாதிருந்தார்.

## 4. பன்னூல் பயிறலும் இன்னலுறலும்

### கல்விச் சிறப்பு

'கல்வி யழகே யழகு' 'கைப்பொருள் தன்னினும் மெய்ப்பொருள் கல்வி' 'இளமையிற் கல்வி சிலையில் எழுத்து' 'இளமையிற் கல்' 'எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்'. எனவே 'எண்ணெழுத் திகழேல்.' 'பிச்சை புகினும் கற்றல் நன்று.' 'அறிவுடை ஒருவனை அரசும் விரும்பும்'. இவ்வாறெல்லாம் எண்ணி எண்ணித் தம்மிரு மைந்தர்க்குத் தாமே தொடக்கக் கல்வியை அளிக்கத் திரு. விருத்தாசலனார் துவங்கினர்.

### தொடக்கக் கல்வி

தம் தந்தையாரிடம் கற்பன கற்றுக் கேட்பன கேட்டு ஓரளவுக்குத் தமிழறிவு அமைவுறப் பெற்றனர் திரு. வி. க. உலகநாதர் கல்வி கற்கும் காலை அருகில் நிற்கும் திரு. வி. க. "கற்றலில் கேட்டலே நன்று, ஆதலின் கற்றிலனாயினும் கேட்க" என்று ஓதா துணர்ந்து, தாம் தம் 'செவி வாயாக நெஞ்சு களனாகக் கேட்டவை விடாதுளத்து அமைத்து' மனப்பாடமாக் கிக் கொண்டனர். பாடந் தொடங்கு முன்பே கலியாண சுந்தரனார் தம் அண்ணனுடன் கேட்ட உலகநீதி, அவருக்கு வாக்குண்டாம்படிச் செய்தது; வாக்குண்டாம் அவரை நல்வழியில் நிறுத்தியது; நல்வழி அவரை ஆத்திச்சூடி அமர்ந்த கோன்றை வேந்தன்பால் அன்பு கொளச் செய்தது. இங்குச் சொன்ன நூல்கள் எல்லாம் திரு. வி. க.விற்கு மனப்பாடமாயின.

### ஊர் திரும்புதல்

இத் திறத்தையறிந்து விருத்தாசலனார் வியந்தார்; மகிழ்ந்தார். மகனை நெஞ்சிற் புகழ்ந்தார். ஆயின் மேற்கொண்டு கற்பிக்க அருகில் சிறந்த பள்ளிகள் இன்மையை உணர்ந்தார்; உள்ளம் நெகிழ்ந்தார்; முடிவில் ஒரு முடிவுக்கு வந்தார். மீண்டும் இராயப் பேட்டைக்குத் திரும்பிவிட நினைத்தார். தம் பெண்களின் திருமண நிகழ்ச்சியும், பிள்ளைகளின் கல்வி வளர்ச்சியும் கருதி, நிலபுலன்களை ஒரு நண்பர்பால் நம்பி ஒப்படைத்து விட்டு, இராயப்பேட்டைக்கு மீண்டார். ஊரிற் பழகியவர்கள் கண்ணீரும் கம்பலையுமாய் வழியனுப்பினர். சிலர் ஒரு கல் இரு கல்வரை வந்து வழிவிட்டனர். ஆனால் கறுப்பன் என்ற நாய் மட்டும் விடாமல் திரு. வி. க. குடும்பத்தோடு தொடர்ந்தது. சென்னையில் நாயடிப்போர் தொல்லைக்கு அஞ்சிக் கறுப்பனை ஒரு நண்பர் பொறுப்பில் ஒப்படைத்து மீண்டனர். அந் நாயின் நினைவு திரு. வி. க. மனத்தில் இறுதி வரை பச்சென்றிருந்தது. இராயப்பேட்டையில் மீண்டும் புதியதொரு மண்டி அமைக்கப்பட்டது. வியாபாரம் முன்போல் விளங்கிற்று.

### பள்ளியிற் சேர்தல்

சென்னையில் வந்ததும், திரு. விருத்தாசலனார், இராயப்பேட்டை முத்துமுதலி தெருவில் இருந்த ஆரியன் பிரைமரிப் பாடசாலையில் 1891-ஆம் ஆண்டு மூத்தவரை நான்காம் வகுப்பிலும், இளையவரை இரண்டாம் வகுப்பிலும் சேர்த்தார். திரு.வி. உலகநாதனார் மட்டும் சின்னாளில் வெஸ்லி கலாசாலையில் சேர்க்கப்பட்டார்.

### கட்டுரைப் பரிசு

மூன்றும் வகுப்பில் திரு. வி. க. படித்துக்கொண் டிருந்தபோது, திரு. பராங்குசம் என்னும் அன்பர் ஒருவர், மூன்று-நான்கு வகுப்புகளுக்கு உரிய மாணவர்க் குப் பொதுவாக ஒரு கட்டுரைத் தேர்வு நிகழ்த்தினர். தென்னை, வாழை, பசு, நாய் என்பன கட்டுரைத் தலைப்புக்கள். இவற்றுள் வாழை என்ற தலைப்பில் திரு. வி. க. அரியதொரு கட்டுரை எழுதி முதற்பரிசைப் பெற்றார். இதனால் கற்றவர் விரும்பும் கல்விச் செல்வ மாக விளங்கினர். திரு. வி. க.

### பொறாமை வித்து

கல்வியில் சிறந்து விளங்கிய இவர்க்குக் கையெழுத்து மட்டும் நன்கு அமையவில்லை. இவர் தந்தையார் இதற்குப் பல முறை கண்டித்தார். என்ன பயன்? பயின்றும் முயன்றும் பலன் ஏற்படவில்லை. இவர் வகுப்பில் டானியல்சிங் ஒரு மாணவன். அவன் கையெழுத்து மிக அழகாயிருக்கும். அது சுந்தரத்தின் மனத்தில் பொறாமைக் குவித்தூன்றிற்று. அதனால் அம் மாணவன் எழுதும் பென்சிலின் கூர்மையை ஒடித்து விடுவது திரு. வி. க. வழக்கம்.

### வீண் காலக் கழிவு

ஆரியன் பிரைமரி பள்ளி, செயற்குழுவினருக்குள் நேர்ந்த மனத்தாங்கலால் நான்கு மாதகாலம் மூடப் பட்டது. திரு. வி. க. வின் படிப்புக்காலம் பாழாவ தரிந்து திரு. வி. க. வை அவர் தந்தையார் 1894-இல் நான்காம் வகுப்பில் ஏ பிரிவில் சேர்த்தார். கல்வி கலை வளர் மதியென நலமே வளர்ந்தது. இயற்கைக்கே

திரு. வி. க. இளமையில் பெரியாராதல் பிடிக்கவில்லை போலும். இவர் படிப்புக்காலம் நான்கு மாத அளவு பாழாய்விடுமே என்றன்றோ திரு. வி. க. வின் தந்தையார் அஞ்சினர்? இப்போது நான்காண்டுக் காலம் வீண் காலமாகுமாறு திரு. வி. க. தம் மறதியால் ஒரு நிலையை வரவழைத்துக்கொண்டார். அது வருமாறு:

மூடவனாதல்

அந்நாளில் குட்டியானைபோல் கட்டிளங்காளையாய் வளர்ந்து வந்த திரு. வி. க. விற்கு உடல் பருமன் அதிகமாகிக்கொண்டே வந்தது. இவரைப் 'பொதுக்கன்' என்று மாணவர் நகையாடினர். தம் மகன் உடற்பெருக்கத்தைக் குறைக்க விரும்பிய திரு. விருத்தாசலனார் கடும்பத்தியமிருக்க வேண்டியதான ஒரு மருந்தெண்ணெயினை, ஒரு சாமியார் உதவியால் வாங்கித் திரு. வி. க. விற்குப் புகட்டி வந்தார். திரு. வி. க. வும் பெற்றோரும் விழிப்பாகவே பத்தியம் காத்து வந்தனர். ஆயினும் என்ன? "பேதைப் படுக்கும் இழவூழ்" அன்றோ? திரு. வி. க. பள்ளிக்குச் சென்றிருந்த சமயம், நண்பர்கள் வாங்கித் தந்த உளுந்து வடையைப் பத்திய நினைவு இன்றி நாக்கிற்கு அடிமையாகித் தின்றுவிட்டார். அடிமையில் விளைவது தாங்கொணாக் கொடுமையன்றோ? 'ஆசை படப்பட ஆய்வரும் துன்பங்கள்' என்பது திருமூலர் தெய்வ மொழி, ஆசை என்ன செய்தது? மறதியைக் கொண்டு வந்தது; மறதி என்ன செய்யாது? பொதுக்கன் என்ற பெயரை மாற்றப்போய் முடவன் என்ற ஒரு புதுப் பெயரையும் திரு. வி. க. தேடிக்கொண்டார். ஒருநாள் பள்ளியினின்றும் வீட்டுக்குத் திரும்பும் வழியில், பத்திய முறிவு

தன் வேலையைச் செய்துவிட்டது. வழியில் இடக் கால் முடங்கிக் கீழே விழுந்து திரு. வி. க. துடித்தார். சில விநாடியளவில் வலக் கையும் முடங்கிக்கொண்டது. அன்று முதல் ஓராண்டு அளவு முடவராய் ஒரு மூலையில் திரு. வி. க. முகம் வாடிக் கிடந்தார்.

## சிகிச்சையில் குணம் பெறல்

இராயப்பேட்டையில், பௌத்த மதப் புலவரும் மருத்துவப் பண்டிதருமாயிருந்த அயோத்தி தாஸ் பண்டிதரின் சிகிச்சையினால் ஒரு மண்டல நாட்கள் தைலம் தேய்க்கப்பட்டது. முட்டிகளில் ஒருவாரங் கழித்துப் புண்கள் கொப்புளித்தன. "இனி அஞ்சவேண்டியதில்லை" எனத் தேற்றினார் அயோத்தி தாஸ். சுந்தரனாருக்கு இருந்த 'பொதுக்கு' வற்றலாகியது. ஏறத்தாழ ஓராண்டுக் காலம் கடந்த பிறகு முடவன் என்ற பெயர் நீங்கியது. பழையபடி குழந்தை நடை பயின்று, பிறகு கிழவன் நடையும் பயின்று, முடிவில் சுந்தரனார்க்கு வாலிப நடையும் திரும்பியது. அன்று சுந்தரமூர்த்தி நாயனார் இரு கண்ணும் பட்டு, சில நாட்களுக்குப் பின்னர் ஒரு கண்ணும், பிறகு இரு கண்ணும் வரப்பெற்றதைப் போல, கலியாண சுந்தரர்க்கும் கையும் காலும் வரப்பெற்றமை பெயர் ஒற்றுமையாலோ ?

## இளமையில் வறுமை இன்னல்

பிறகு இளைப்புற்ற உடலின் களைப்பு அற்றுப் போக, ஓய்வுக்காக ஓராண்டு ஒழிந்தது. மீண்டும் பள்ளியிற்சேர முயற்சி கொண்ட காலை திரு. வி. க. தந்தையார்க்கு விக்குள் நோய் மிக்கது ; தாயார்க்கு வயிற்று வலி தோன்றி வருத்திற்று. எழும்பூர் மருத்துவ நிலை

யத்தில் சுந்தரனாரின் தாயார் சேர்க்கப்பட்டார். செலவு வளர்ந்தது. மற்றும் துள்ளத்திலிருந்து வரவேண்டிய வரவும் தளர்ந்தது. குடும்பத்தில் ஏமாற்றமும் மோசமும் நெருக்கடியை ஏற்படுத்தின. இந்நாட்களில் திரு. வி. க.வின் பாட்டனாரும் இயற்கை எய்தினார். இன்ன பிற துன்பங்கள் சூழப்பெற்றதால், திரு. வி. க. வை ஏதேனும் கைத்தொழிற் பயிற்சியில் அல்லது ஓவியப் பள்ளியில் விட நினைத்தார் தந்தையார். எதனையும் விரும்பவில்லை திரு. வி. க. அரிசி மண்டியும் மூடப்பட்டது. குடும்பம் வறுமை நோய்ப்பட்டது.

> "கொடிது கொடிது வறுமை கொடிது ;
> அதினினும் கொடிது இளமையில் வறுமை."

என்பது திரு. வி. க. வாழ்வில் மெய்யாயிற்று. இவ்வகையாக மேலுமீராண்டுகள் வறிதே கழிந்தன.

### மீண்டும் பள்ளி

மீண்டும் பள்ளிக்கே அனுப்புவதென முடிவு செய்யப்பெற்றது. அதன்படி 1898-இல் வெஸ்லி கல்லூரியில் திரு. வி. க. சேர்ந்து, முன்னர் விட்ட இடத்திலிருந்து பயிலலாயினர். 1898 முதல் 1904 வரைக்கும் திரு. வி. க. வின் கல்வி நீரோடை தங்கு தடையின்றிப் பாய்ந்தோடிற்று. இவ்வாறாண்டுக் காலத்தில் கண்ணும் கருத்துமாய் எண்ணும் எழுத்தையும் நன்றாகக் கற்றுத் தேர்ந்தார். எல்லா வகுப்பிலும் இவரே முதல்வர் எனும்படிப் போற்றப்பட்டார். இவரோடு படித்த மாணவருள் எஸ். பி. கணபதி என்ற மாணவர் ஒருவரே இவருக்கு ஈடாக இலங்கினார். இவ்விருவரும்

வகுப்புதோறும், ஏ. பி. பிரிவுகளில் மாறி மாறி அந்நாள் ஆசிரியர்களால் சேர்க்கப்பெறுதல் வழக்கம். முதல் மாணவரே சட்டம்பிள்ளையாய் இருப்பதும் வழக்கம். தத்தம் வகுப்பிற்கு மதிப்பும் பரிசும் தேடவே திரு. வி. க. வை. எஸ். பி. கணபதியோடு ஒரே வகுப்பில் ஆசிரியர்கள் சேர்த்துக்கொள்ளாமல் போட்டி ஏற்படச் செய்தனர் எனின் திரு. வி. க. படிப்பில் கொண்ட திறமைக்கு வேறு சான்று தேவையில்லை. திரு. வி. க.வுடன் ஒருசாலை மாணவராய்ப் படித்தவருள் கல்வித் துறை நிபுணர் சச்சிதானந்தம் ஒருவர் மட்டுமே இன்று தமிழகம் அறிந்த பேரறிஞராயுள்ளார்.

### சில நல்ல பண்புகள்

சுந்தரனார் தம் ஆசிரியர்களிடத்தில் அளவிலா ஆர்வமும் பணிவும் நன்றியறிதலும் உடையவர். ஆசிரியர்களுக்கு உற்றுழி உதவி புரிவார். உறுபொருள் கொடுக்கும் நிலையில் அவர் செல்வநிலை யில்லையென்றாலும் ஆசிரியர் மனமுவப்பனவற்றை அறிந்து செய்து, அன்பைப் பெருக்கி அன்பிற்கு ஆளாவார். இதனால் ஆசிரியர் வீடுகளிலும் சுந்தரனாருக்கு நல்ல வரவேற்புண்டு. இவர் தம் நான்காம் வகுப்பு ஆசிரியர் தேவதாஸ் என்பவரின் இல்லக் கிழத்தியார் இவர் பண்பு அறிந்து மகிழ்ந்து போப்பையர் இலக்கணம் கற்பித்தார். நான்காம் வகுப்பிலிருந்து மேல் வகுப்புக்குச் சென்றது முதல் சுந்தரனார் சம்பளமில்லாமல் பயின்று வந்தார். எப்படி ? கிறித்துவப் பாதிரிகளால் நடத்தப்பெற்று வந்த ஞாயிறு வகுப்புக்களுக்குத் தவறாமல் போய்ப் பாடங் கேட்டு அவர்கள் நடத்திய தேர்வில் தேர்ச்சி பெற்றமையால்தான்.

### பாடமல்லாதவற்றிலும் பற்று

மூன்றும் படிவம் படித்து முடிந்ததும், இவர் 'லோயர் செகண்டரித் தேர்வு' எழுதி அதிலும் வெற்றி பெற்றார். ஐந்தாம் படிவத்தில் படிக்குங்கால் கிருஷ்ண ராவ் என்ற கிறித்துவ ஆசிரியருடன் அன்பால் நட்பு செய்து கொண்டு, கிறித்துவ மத உண்மைகளை, அவருடன் வாதங்கள் பல புரிந்து அறிந்துகொண்டார். ஆறும் படிவத்தில் மாணவராய் இருந்த போழ்தில் அப்பள்ளியில் தமிழாசிரியராய் இருந்த யாழ்ப்பாணம் நா. கதிரைவேலருடன், அவர்தம் சொற்பொழிவி லீடுபட்டு நெருங்கிப் பழகி, அவர் நெஞ்சங் கவர்ந்து கொண்டார். கதிரைவேலர் கூறிய முறைப்படியே திரு. வி. க. ஒழுகினார்; வேலர்தம் கூட்டுறவால் சைவ மத சாரங்களையும் ஒருவாறுணர்ந்தார்.

### கதிரைவேலரிடம் தோண்டனாதல்

திரு. கதிரைவேலர் தொடர்பால் திரு. வி. க. வின் கல்வி வளர்ச்சி தடைப்பட்டது என்றால், அதில் தவறில்லை. ஆறும் படிவத்தில் படித்து வந்த நாட்களில் திரு. வி. க. வின் மனம் கதிரைவேலரின் மதப்பிரசாரத்திலும், சமயவாத-புறச்சமய மறுப்புச் சொற்பொழிவுகளிலும் தேனில் விழுந்த வண்டாய்ப் புறம்போக முடியாமல் ஒட்டிக்கொண்டது. "இங்நிலை திரு. வி. க. விற்கு ஊறு விளைக்கும்" என ஆசிரியர் பலர் எவ்வளவு எடுத்துச் சொல்லியும், திரு. வி. க. மனமாறவில்லை. தம் அறிவுக்குச் சரி என்ற வழியில் திரு. வி. க. ஒழுகி வந்தார்.

### வழக்குகள்

திரு. நா. கதிரைவேலர் மீது ஒரு வழக்கு அந்நாளில் தொடர்ந்து நடந்துகொண்டிருந்தது. இராம

லிங்க அடிகளின் அருட்பாவை, மருட்பா என்று கதிரைவேலரின் ஆசிரியர் ஆறுமுக நாவலர் கூறிவந் தார். அதைப் பின்பற்றிக் கதிரைவேலரும் மறுப்பு எழுதி வந்தார். அதனல் இராமலிங்க அடிகளின் மாணவர் சிலர் வெகுண்டு வேலர்பால் காழ்ப்புக் கொண்டு வழக்குத் தொடுத்திருந்தனர். அவ்வழக் கோடு பிறிதொரு பொய் வழக்கும் தொடரப்பட்டது. அது கதிரைவேலர் தம்மைக் கொத்தவாற்சாவடிக் கருகில் தாக்கியதாக திரு. வில்வபதி என்பவர் தொடுத் திருந்த வழக்கே. இவ்வழக்கில் திரு. வி. க. வும் மன மார ஈடுபட்டிருந்தார். நீதிமன்றத்தில் திரு. வி. க. வின் சான்றும் தேவையாயிருந்தது. ஜார்ஜ் டவுன் நீதிமன்றத்தில் முன்னைய வழக்கும், எழும்பூர் நீதி மன்றத்தில் பின்னைய வழக்கும் நடைபெற்றன.

## சான்று கூற அழைப்பு

சான்று கூறுதற்குத் திரு. வி. க. வை அழைத்த நாள் ஆறும் படிவத்துக்குரிய தேர்வு நாள் ஆகும். அரசாங்கத்தார் நடத்தும் பள்ளி இறுதித் தேர்வுக்கு (School Final Examination) அனுப்பத் தக்க மாணவர் களைத் தேர்ந்தெடுக்கும் தேர்வே (Selection Examination) அது. அத்தேர்வின் முதல் நாளில் சான்று கூறத் திரு. வி. க. இராயப்பேட்டையிலிருந்து எழும்பூருக்குச் செல்லவேண்டியவரானர். திரு. வில்வபதியைத் தாக் கியதாகக் கூறப்படும் நாளில் திரு. கதிரைவேலர் பள் ளிக்கு வந்து பாடமும் நடத்தியிருந்தார். ஆதலின் மாணவர்கள் சார்பில் அதை மெய்ப்பிக்கச் சுந்தரனர் அழைக்கப்பட்டிருந்தார்.

### தமிழ் வென்றது

தமிழாசிரியர்பால் வைத்த நேயம் ஒருபுறம்; வாழ்வை வகைப்படுத்தும் தலையாய தேர்வில் கொண்ட கடமை ஒருபுறம். இரண்டிற்கும் இடையில் திரு. வி. க. சில போழ்து ஒன்றுவிட்டொன்று பற்றி ஊசலாடினார். இருதலைக்கொள்ளி எறும்புபோலானார். "யார் அறிவார் தமிழ் அருமை? நீரறியும், நெருப்பறியும்" என்று சிலர் தமிழ் அருமையைப் பழமையில் வைத்துச் சாற்றுவார்கள். இந்நாளில் தமிழருமையைத் திரு. வி. க. அறிந்தார். தமிழ் வென்றது; ஆங்கிலத் தேர்வு மோகம் அழிந்தது; சான்று பகரச் சென்றார்.

### பள்ளிக்கு ஒரு முற்றுப் புள்ளி

நீதிபதி திரு. இராஜரத்தினம் மாணவரின் நிலையுணர்ந்தார். காலை மாலை பள்ளி நேரத்துக்கு இடைப்பட்ட நடுப்பகல் ஓய்வு நேரத்தில் மாணவர் சான்று கூற ஏற்பாடு செய்தார். ஆயினும் என்ன பயன்? பிற்பகல் தேர்விற்கு உரிய வேளையில் வந்து சேரத் தகுதியான வண்டி தவறியது. மூன்றும் நாளும் தொடர்ந்து திரு.வி. க. சான்று கூறினார். திரு. வி. க. வின் பெரிய தந்தையார் மகனார் இராஜாவும் ஆசிரியர்களும் பன்னிப் பன்னிச் சொன்னவெல்லாம் விழலுக்கு இறைத்த நீராயின. மூன்றும் நாளும் வண்டியைத் தவறவிட்டார். முடிவில் இரண்டு அரைநாள் தேர்வுகளில், கலந்துகொள்ளத் தவறினார். அதனால், முடிவுத் தேர்விற்குக் கல்லூரித் தலைவர், திரு. வி. க. வை அனுப்ப மறுத்தார். திரு. கிருஷ்ணராவ் போன்ற ஆசிரியர்கள் தலைவரிடம் சென்று திரு. வி. க. வின் அறிவிற்காக-பண்பிற்காக முடிவுத் தேர்விற்கு அனுப்புமாறு மன்றாடினர். முடிவு

திரு. வி. க. விற்குச் சாதகமாயில்லை. "மிஷனரி வசதிகளோடு திருவள்ளூரிலோ மன்னார்குடியிலோ உள்ள மிஷன் பாடசாலைகளில் ஒன்றில் மீண்டும் ஓராண்டளவும் சேர்ந்து, கற்றுத்தேர்வு எழுதட்டும்" என்று கண்டிப்பும் அன்பும் கொண்டு கல்லூரித் தலைவர் கூறிவிட்டார். திரு. வி. க. விற்கு இவ்வேற்பாடு பிடிக்கவில்லை. கற்ற வகுப்பிலே மீண்டும் கற்பது அவர்க்கு விருப்பமாயில்லை. அதனுல் மெட்றிகுலேஷன் தேர்வை எழுதாமலேயே திரு. வி. க. பள்ளிப் மடிப்புக்கு ஒரு முற்றுப் புள்ளியிட்டார். ஆயினும் பின்னுளில் திரு. வி. க. பெற்ற புகழை அன்று மெட்ரிகுலேஷனில் தேர்ந்த ஒருவரும் பெற்றிலர் என்பதை ஓர்க.

### தந்தையார் பிரிவு

> " ஊழின் பெருவலி யாவுள ? மற்று ஒன்று
> சூழினும் தான் முந்துறும் "

என்பதை யுணர்ந்து மனம் தேறினர்.

பள்ளியைவிட்டு வெளியேறிய சின்னுட்களில், தம் அருமை மைந்தனின் கல்வி போய்விட்டசோர்வால் தந்தையும் காலமாய்விட்டார். பிறகு மூத்த அண்ணல் திரு. இராஜா அவர்களின் அரவணைப்பில் வளர்ந்தார்.

### தொழிற்கல்வி கற்றல்

இராஜா அவர்கள் இலௌகிகவாதி. தம்பியாரை "புக் கீப்பிங்" (Book-Keeping) தேர்வுக்காகப் படிக்க, "கமர்ஷியல்" பள்ளிக்குப் (Commercial Technical Institute) போகுமாறு தூண்டினர். திரு. வி. க. வேண்டா வெறுப்புடன் அண்ணலாரின் மனம் புண்ணுகாதபடிக் கீழ்ப்படிந்தார் ; "புக் கீப்பிங்" தேர்வில் தேறினர் அண்ணலை மகிழ்வித்தார்.

### மாணவர்க்கு அறிவுரை

"பள்ளியில் படித்து வருங்கால் மாணுக்கர் வேறு துறைகளில் கருத்தைச் செலுத்தலாகாது என்று யான் அவர்க்கு அறிவு கொளுத்துவதை எனது கடமைகளுள் ஒன்ருகக்கொண்டுள்ளேன் இந்நாளில்" என்று திரு. வி. க. தம் வாழ்க்கைக் குறிப்புக்களில் தாம் துய்த்தறிந்த அநுபவ வுண்மையைக் கூறி மாணவர்களை எச்சரிக்கின்ருர். மாணவர்கள் தமிழ்நாட்டுத் தவச்செல்வர் ஒருவரின் அடைவு மொழியைக் கருத்திலிருத்தி வாழ்வாராக.

### தமிழ்க்கல்வி கற்றல்

திரு. நா. கதிரைவேலரால் கவரப்பட்டுப் பள்ளிப் படிப்பை அரைகுறையாகநிறுத்திக்கொண்ட திரு.வி.க. அதே கதிரைவேலரிடம் முறையாகத் தமிழ் பயிலலாயினுர். சமய வாதத்திலேயே முழுவதும் ஈடுபட்ட கதிரைவேலருக்குக் கற்பிக்கப்போதிய காலம் இல்லை. அதனுல் திரு. வி. க. அவர் சொற்பொழிவுகளைக்கேட்டும் மறுப்புக் கட்டுரைகளை நன்கு கற்றும் தமிழ்ப்புலமை எய்தினுர். 'கேள்வி முயல்' என்னும் ஔவையாரின் சொல்லின் முழுப் பொருளையும் அநுபவத்தில் திரு. வி. க. அடைந்தார். இதனுல் இலக்கிய இலக்கணங்களிலும், தர்க்க சாத்திரங்களிலும் திரு.வி.க. புலமையடைந்தார். வேலைமாற்றம் காரணமாகத் திரு. கதிரைவேலர் நீலகிரிக்குச் செல்ல நேர்ந்த காலத்தில் திரு. வி. க. தாயைப் பிரியும் கன்றுபோலத் துயரமுற்ருர். பிறகும் மாணவரும் ஆசிரியரும் கடிதப் போக்கு வரவு வைத்துக் கொண்டனர். ஒருமுறை வேனிற்கால விடுமுறைக்குச் சென்னை வருவதாகத் திரு. கதிரைவேலர் எழுதியிருந்த

படி, சென்னை வந்து இரண்டு திங்கள் தங்கினர். அந் நாட்களில் திரு. வி. க., வேலரிடம் பாடல் எழுதும் இலக்கியமாகிய யாப்பிலக்கணங்களை நன்கு பயின்று தெளிந்தார்.

### வேலர் பிரிவால் வேதனை

பிறகு கதிரைவேலர் நீலகிரி திரும்பினர். மீண்டும் கடிதப் போக்குவரவு கவிதை மூலம் தொடங்கியது. ஆனல் சின்னளில் காய்ச்சலால் வேலர் மறைந்தார். அவர் மறைவு திரு. வி. க.விற்குப் பேரிடியாயிருந்தது. இப்படி மனங்கலங்கிய நாட்களில் சிதம்பரச் செய்யுட் கோவை, பாம்பன் குமரகுருதாசரின் திருவலங்கல் திரட்டு முதலிய நூல்களில் அவர் மனம் ஒன்றியது. அதன் பயனய்ச் சைவசித்தாந்த நுட்பங்களில் திரு.வி. க. வின் உள்ளம் செல்லத் தொடங்கிற்று.

## 5. இளமைப் பருவத்து எண்ணங்கள்

### எண்ணத்திறுற்றல்

> "எண்ணிய எண்ணியாங்கு எய்துப ; எண்ணியார்
> திண்ணியர் ஆகப் பெறின் !"

என்ருர் செந்நாப்போதார்.

இதனுல் நாம் அறிவதென்ன? எண்ணம் மனிதனை ஆக்குகிறது; எண்ணத்துக்கு உருவம் உண்டு. உலகை அழிக்கவோ, ஆக்கவோ, காக்கவோ செய்யுமளவுக்கு எண்ணத்தின் ஆற்றல் திண்ணியதாகும். அவரவர் எண்ணங்களே அவரவர் வாழ்க்கை நிலையை நிலை நிறுத்துகின்றன. தீய எண்ணங்கள் தீயவற்றையே பயக்கின்றன. தூய எண்ணங்கள் நன்மையானவற்றையே நல்குகின்றன. ஆதலால் நல்லெண்ணமே, ஒவ்வொருவர் உள்ளத்திலும் தோன்றப் பழகுதலும், பழக்குதலும், பயிறலும், பயிற்றுதலும் வேண்டும். எண்ணங்களில் ஒருவனுக்குள்ள உறுதி, அவனது ஒழுக்கமாய் மலரும். மலரவே நல்லெண்ணத்தில் உறுதியுடையவனுகிருன் ; தீய எண்ணத்தில் உறுதியுடையவன் தீயொழுக்கமுள்ளவனுகிருன்.

> "நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்கம்; தீ ஒழுக்கம்
> என்றும் இடும்பை தரும்"

என்பது தெய்வப் புலவர் வாக்கு.

### இளமையில் எண்ணம்

குழந்தைப் பருவத்தில் தெளிந்த எண்ணம் தோன்றுவதில்லை. தக்கது இன்ன தகாதன இன்ன என்று பிரித்துணரும் பருவம், ஓரளவுக்காகிலும் உல

கியலறிவும், கலை, மொழியறிவும் தோன்றிய பிறகே யாகும். அப்பருவம் இளமைப் பருவமேயாகும். இளமையில் ஒருவன் பெறும் எண்ணங்களே முதுமை வரையிலும் அம்மகனை ஆள்கின்றன. குழந்தை செய்யும் தவறுகளைப் பழியெனக் கருதுவோரிலர்; ஆனால் பிள்ளைமை முற்றிய இளமைப் பருவத்தில் ஒரு சிறுவன் செய்யும் தவறுகளை எவரும் பொறுத்துக் கொள்வதில்லை. மாறாகப் பிழையை அவனுக்கு அறிவுறுத்தித் திருத்த முற்படுவர். ஏன்? ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையுமா?

"இளைதாக முள்மரம் கொல்க; களையுநர்
கைகொல்லும் காழ்த்த இடத்து"

என்பது குறளன்றோ?

இதனால் நாமறிவது என்ன? இளைஞர் விழிப்பாயிருந்து தம் நெஞ்சினைப் பாழ் எண்ணங்களுக்குப் பாசறையாக்கிக்கொண்டு வீழ்நிலையுறுதல் கூடாது என்பதே. எண்ணங்கள் சூழ்நிலையாலேதான் பெரிதும் உருவாகின்றன. 'இனத்தியல்பது ஆகும் அறிவு' ஆதலின் இளைஞர் நல்லோர் இணக்கம் அறிந்து இணங்கி உய்தல் நல்லது. திருவள்ளுவர் இதனை நமக்கு நன்கு உணர்த்தவே 'சிற்றினம் சேராமை' என்றோர் அதிகாரமே வகுத்து அருளியுள்ளார்.

திரு. வி. க. எத்தகைய எண்ணங்களால் உருவானவர்? எத்தகைய இனத்தினர்? இளமையில் அவர் நெஞ்சில் தோன்றிய எண்ணங்களால் விளைந்த செயல் யாவை? என்பதை ஈண்டுச் சிறிது காண்போம்.

## ஒதுங்கி நிற்றல்

திரு. வி. க. வீட்டருகே சுந்தரேஸ்வரர் கோயில் இருந்தது. அதில் விழாக் காலங்களில் சுண்டல், பொரி

கடலை முதலியன வழங்குதல் வழக்கம். சுண்டலைப் பெறப் பெரியவரும் சிறியவரும், சுண்டல் வழங்கு வோரை ஈயென மொய்த்தும், சண்டைகள் போட்டும் சில சமயம் மண்டைகளையும் உடைத்துக்கொள்வது நம் காலத்திலும் உள்ள காட்சியேயாகும். ஒருவர் பின் ஒருவர் செல்லும் 'கியூ' (Queue) முறை நமக்கு இன் றும் நடைமுறையில் வராத ஒன்று. திரு. வி. க. வோ இச் சுண்டல் குழுவில் சேராமல் தனித்தே ஒதுங்கி யிருப்பார். சிறுவயதிலேயே நாவிற்கு அடிமையாகிப் பட்ட துன்பத்தால், மீண்டும் நாவிற்கு அடிமையாகா திருந்தார். சுண்டல் தருபவர் அண்டையில் வந்து கொடுத்தால் வாங்கிக்கொள்வார். இன்றேல் வெறுங் கையராகவே வீடு திரும்புவார்.

நொண்டிக்கு மணலபிஷேகம்

தம் சோத்தனைத்தையும் இந்தக் கோயிலுக்கே வழங்கிய சிவத்தொண்டர் மண்டி மன்னுதனுர். அவர் திரு. வி. க. ஒதுங்கியிருப்பது அறிந்து அவரிடம் வந்து பிரசாதம் தந்து போவது வழக்கம். அவரைப் பின்பற்றி வேறு சிலர் ஒழுகினர். இம்முறை ஒரு நொண்டியான தொண்டருக்குப் பிடிக்கவில்லை. நொண்டியார் பிள்ளை களை மருட்டுவார்; தள்ளுவார் ; அடிப்பார் ; வைவார். இச்செயல் சுந்தரருக்குப் பிடிக்கவில்லை. நொண்டியார் திரு. வி. க.வை, "தொட்டராயன் இவன்," என்று கூறி வெறுப்பார். ஒருமுறை திரு. வி. க. தம் தோழர்களுடன் கூடி "என்ன செய்யலாம்?" என்று எண்ணினர். ஒரு முகமாக "நொண்டியார்க்கு மணல் அபிஷேகம் செய்ய லாம்" என்ற முடிவுக்கு வந்தனர். ஒருநாள் நொண்டி யார்க்கு அவ்வபிஷேகமும் நடந்தது.

### போலி நாகரிக வெறுப்பு

நாக்குக்கு அடிமையாகாமல் இருக்கவேண்டும் என்ற எண்ணத்தின் உறுதியே, பின்னளில் திரு. வி. க.வை, காஃபி, டீ, கொக்கோ முதலியவற்றைப் பருகிப் பாழாகாதபடி காத்தது. இவ்வுறுதியே அவரை,

> "உண்ணும் சோறும் பருகும் நீரும் வெற்றிலையும் எல்லாம்
> கண்ணன் எம்பெருமான்"

என்று ஆழ்வார் பாசுரம் ஓதியிருந்தும்கூடத் தாம்பூலமும் தம் வாழ்க்கையில் ஒருமுறையேனும் தரிக்காதபடி காத்தது. 'காட்டுக்குப் புலி; வீட்டுக்குப் புளி' என்பர். திரு. வி. க. அவர்கள் இத்தகைய கொடிய புளியையும் மிளகாயில்லாத உணவையும் ஏழைகளின் உணவாகிய கூழையும் வெறுப்பின்றி உண்டு தம் உடலை ஓம்பினர்.

### விளையாட்டில் ஒற்றுமை

ஒருமுறை இராயப்பேட்டை பெரியபாளையத்தம்மன் கோயில் திருவிழாக்களில் பல்லக்குச் சேவை சிறப்பாக நிகழ்ந்தது. அம்மையார் வீதிவலங் காரணமாகப் பெரியவர்களுள் ஏதோ வேறுபாடு தோன்றி, வாயடியும், கையடியும் வளர்க்கும் நிலைக்குப் பெரியோர்கள் வந்தனர். பெரியோர்களைப் பின்பற்றி அப்படியே நடப்பது இளைஞர் இயல்பு. சிறுவர்களுக்கும் பாகுபாடு தோன்றியது; அதனால் மகிழ்ச்சியுடன் ஆடிவந்த ஆட்டம் தடைப்பட்டது. திரு. வி. க. விற்கு இது பிடிக்கவில்லை. "பெரியவர்கள் அறியாமை நம் ஒற்றுமையைக் கெடுத்தது!" என்று பல கூறிப் பிள்ளைகளை மீண்டும் ஆட்டத்தில் ஊக்கி ஒற்றுமைப்படுத்தினர். இதைக் கண்ட திவான் கோபாலகிருஷ்ணர், திரு. வி. க.விற்கு

ஒரு பட்டுக்குட்டையும், கற்கண்டும், மறுநாள் பள்ளிக்கு வந்து, தந்து, புகழ்ந்து கொண்டாடினார்.

### சன்மார்க்க நெறி

இந்த ஒற்றுமை உணர்ச்சியே பிற்காலப் பெருவாழ்வில் திரு. வி. க.விற்குச் சமரச சன்மார்க்கத் தமிழ் நெறியைக் காட்டியது எனலாம்; பல வேறு கொள்கையுடையார் அனைவரையும் தம்மிடத்தில் பற்றுக் கொண்டு பழகுமாறு செய்வித்தது எனலாம்.

### விருப்பும் வெறுப்பும் தந்த விளையாடல்கள்

திரு. வி. க. தம் கைகால் முடங்கியதன் பயனாய்க் குணம்பெற்ற பின்னரும் இரண்டாண்டுகளுக்குமேல் சும்மா இருந்தார் என்று நாம் முன்னே கூறினோமல்லவா? அந்நாட்களில் சென்னையில் உள்ள மற்களங்களில் (கோதாக்கள் எனவும் அழைப்பர்) திரு. வி. க. நெருங்கிப் பழகலானார். சிலம்ப ஆசிரியர்களில் அனுபவமுடையவர்கள் தலைமையில் நலம்பல புரியும் சிலம்பக் கலை அந்நாளில் செழித்தது. குதிரை-ரேக்ளா பந்தயங்களிலும் மாட்டுப் பந்தயம், ஆட்டுக்கிடாப் போர், கோழிச்சண்டை முதலியவற்றிலும் விருப்பங்கொண்டு திரு. வி. க. அலைந்தார். இத்துறைகளில் சிறந்த வடிவேலர் மற்களத்தில் திரு. வி. க. வின் ஓய்வு பெரிதும் கழியும். கம்பு ஆட்டம், பாணா சுழற்றல் முதலியவற்றில் திரு. வி. க. ஈடுபட அவர் உடல்நிலை இடந்தரவில்லை. ஆனாலும் தண்டால். பஸ்கி, கர்லாக்கட்டை சுழற்றல் முதலியவற்றில் பயிற்சி செய்துவந்தார். கத்தி சுழற்றல், நரம்பு வித்தை, பாய்ச்சல் வித்தை முதலியன திரு.வி.க. விற்கு வியப்பூட்டின. பட்டாக்கத்தி சுழற்றலிலும்

சிறிது பயின்ருர்; பயங்கொண்டு பிறகு அதை விட்டொழித்தார். புலிக்கோலம் இட்டுத் தெருத் தெருதோறும் ஆடும் ஆட்டத்தில் திரு. வி.க.விற்கு அளவற்ற ஆர்வம் உண்டு. பறவைச் சண்டைகளில் புருப் பந்தயந் தவிர்த்த பிற சண்டைகள் அவர்க்குப் பாவச் சண்டைகளாகத் தோன்றின. உப்புக்கோடு, கிளித் தட்டு, சடுகுடு, புள்ளாட்டம் முதலியவற்றில் அவர் மிகுந்த ஆர்வமுடன் கலந்தாடினுர். உப்புக்குந்தம் ஆட்டத்திலும் பின்னுளில் சதுரங்க விளையாட்டிலும் திரு. வி. க. விற்பன்னரானுர்.

## சில விளையாடல்களை ஒழித்தல்

ஒருநாள் மாணவர்களுடன் 'புள்' விளையாடினுர். அவர் அடித்த புள் புள்ளெனப் பறந்துபோய், ஏறிந்தவனது வலப்பக்கம் பலமாக தாக்கியது. அடிபட்டவன் மூர்ச்சையடைந்து வீழ்ந்து விட்டான். அங்கிருந்தவர் அனைவரும் சூழ்ந்துகொண்டனர். விழுந்தவன் ஒருமணி நேரம் கழித்தே எழுந்தான். சுந்தரனுர் புள்ளாடும் வழக்கத்தை ஒழித்துவிட்டார். மற்ருெரு நாள் நீந்தும் பயிற்சிபெறப் போனுர். மல்லர் வடிவேலர் கிணற்றின் அச்சத்தைத் திரு. வி. க. விற்குத் தெளிவிக்கக் கருதிக் கிணற்றில் அவரைத் தள்ளிவிட்டார். மூழ்கி எழுந்த சுந்தரனுரின் இடுப்பில் மற்ருெருவர் கயிறு கட்டி நீந்த விடுத்தார். தந்தையார் திரு. வி. க.வை இச் செயலறிந்து கடிந்ததால், நீச்சுப் பயிற்சியினைக் கைவிட்டார்.

## சூறைத் தேங்காய்

சுந்தரேசர் கோயிலில் தேங்காய் சூறை விடப்படும். ஒரு விழாநாளில் தேங்காய்ச் சூறைவிடப்பட்டது.

சிறுவர்கள் தேங்காய்ச் சிதறலைப் பொறுக்க விழுந்து சண்டையிட்டுக்கொள்ளும் காட்சி அநாகரிகமாய் இருக்கும். திரு. வி. க. ஒரு சிறுமியின் தூண்டுதலால் ஆண்மையை நிலைநாட்ட விரும்பினார். சூறையில் நுழைந்தார். சூறைத் தேங்காய்களை ஒரு கூடையில் கொண்டு வந்தவர் முதலில் ஒரு தேங்காயைச் சூறை விடுவது போல் நடித்து, சுந்தரனாரை ஏமாற்றிப் பிறகு சூறையிட்டார். அத் தேங்காய் சுந்தரனாரின் வலக் கையில் விழுந்து சுண்டுவிரலை நசுக்கிவிட்டது. உடனே கூட்டம் கலைந்தது. அதற்குள் சுந்தரர் அருகில் இருந்த ஆங்கில மருத்துவ நிபுணரிடம் ஓடி நிலைமையை உணர்த்தினார். நிபுணர் விரலை வெட்டிவிட வேண்டும் என்றார். விரலை இழக்க விரும்பாமல், சுந்தரனார் மருத் துவர் தலைமறைந்ததும் நேரே தம் வீட்டு மருத்துவர் அயோத்தி தாஸ் பண்டிதரிடம் ஓடினார். தாஸர் சிகிச் சையால் நசுக்குண்ட விரல் சில நாட்களில் நலமாயிற்று. ஆயினும் இறுதிவரைக்கும் சூறைத் தேங்காயால் ஏற் பட்ட கீறல் மாறவில்லை.

## ஜூலியும் பாலியும்

பெரிய தாயாரின் மகனாராகிய துரைசாமி, ஜூலி என்ற பெயருடைய ஒரு நாய்க்குட்டியை வாங்கி வந் தார்; அதைத் திரு. வி. க. அன்புடன் வளர்த்து வருங் கால், அஃது எப்படியோ காணமல் போய்விட்டது. அத னல் மனம் நொந்த திரு.வி.க. விற்குப் பாலி என்றொரு நாய்க்குட்டியை மீண்டும் வாங்கித் தந்தார் அவர்தம் அண்ணல். அதை உயிராக வளர்த்தார். ஆனல் பாலி அற்ப ஆயுளாயிறந்தது. திரு. வி. க. தம் உற்றார் ஒருவர் இறந்துவிட்டதுபோல் எண்ணி வருந்தினார். சிறுவர்

உதவியால் பாலியை எடுத்துக்கொண்டு போய்த்தென் னந்தோப்பில் புதைத்து ஈமக் கடனாற்றினர். அது முதல் நாய் வளர்த்தலை விட்டுவிட்டார்.

**ஈரமும் வீரமும்**

இங்ஙனம் உயிர்களிடத்து மேற்கொண்ட ஈரமே, திரு. வி. க.வை அவர்தம் வாழ்வில் தந்நலம் கருதாது பொதுநலம் பேணிப் பிறர்க்குரிய பெருந் தொண்டராக் கியது. இத்தகைய இளமையில் பயின்ற வீரமே, துப் பாக்கிக் குண்டுகளுக்குத் தம்முடலை ஒப்பாக்கி விட்டு, தயக்கம் என்பதின்றிச் சாவினைத் துச்சமாய்க் கருதி எதற்கும் அஞ்சாமல், அதிகாரிகளைக் கண்டு கொஞ்சா மல், தந்நலத்திற்காகக் கெஞ்சாமல் தொழிலாளர்க்காக உழைக்கச் செய்தது எனலாமன்றோ?

> "ஈர அன்பினர்; யாதும் குறைவிலர்;
> வீரம் எம்மால் விளம்பும் தகையதோ?"
>
> —சேக்கிழார்.

**பிற விளையாடல்கள்**

இவ் விளையாடல்களேயன்றிக் கடலாடல், ஆநிரை மேய்த்தல், நீர்கொண்டு வருதல், அயலார் தோப்பில் சென்று மாங்காய் பறித்தல், பெருங்களா கவர்தல், பந்தாடுதல், சிவலிங்கம் மணலுருவிற் செய்து விளை யாட்டாய்த் தொழுதல், கூன், குருடு, கால் முடம்பட் டோர் ஆகிய உறுப்புக் குறைவாளர்க்கு வீடுதோறும் சென்று இரந்து தருமச்சோறு எடுத்து உணவளித்தல், ஆட்டத்தில் அறநெறியிலும் மறவழியிலும் வெற்றிக் காகச் சூழ்ச்சி புரிதல், மரங்களில் ஏறிக் குதிக்கும் குரங் காட்டமாடல் முதலாய பல துறைகளிலும் விளையாடிக் கவலையில்லாமல் திரு. வி. க. உடலை ஓம்பி வந்தார்.

## 6. தொழில் முயற்சியும் திருமணமும்

### நெருக்கடி

திரு. வி. க. வின் தந்தையார் காலஞ் சென்றபின், துள்ளங் கிராமத்திலிருந்து சிறிதளவேனும் வந்து கொண்டிருந்த நெல்லும், சரியாக வராமற்போயிற்று. நண்பர்கள் செய்த வஞ்சனையால், துள்ளத்தில் நடந்து கொண்டிருந்த மண்டியும் மூடப்பட்டது. ஊர்ச் சேய்மை, வசூலிப்போர் இன்மை ஆகிய குறைகளால் உழவுத்தொழிலை அறவே விட்டு விட்டனர். பிறகு சின்னம்மாள் தம் மக்கள் உதவியுடன் சிறியதொரு பலசரக்குக் கடை வைத்தார். அதைத் திரு. வி. க. வின் பெரிய தாய் வழிப்பிறந்த அண்ணல் விஜயரங்கனூர் மேற்பார்வையில் விட்டார். குடும்ப நிருவாகத்துக்கு வேண்டியபொருள் இவ்வாணிபத்தால் கிடைக்கவில்லை. என் செய்வார் சின்னம்மையார்? திரு. வி. க. வின் குடும்பம் தமிழறிந்த பழங்குடியாகும். "வறிஞர்க் கழகு வறுமையிற் செம்மை" என்பதை அறிந்து அக் குடும்பத்தினர் குடிப்பிறப்பும் குன்றிப்போகாமல் 'சுருக்கத்து வேண்டும் உயர்வுடன்' வாழ்ந்தனர்.

### தொழில் தேடல்

குடும்பம் படும் இடும்பையை நேரில் உணர்ந் திருந்த திரு. வி. உலகநாதனூர் தம் தாய்க்கு உதவியாக ஒரு தொழிலைத் தேடிச் சம்பாதிக்க முனைந்தார். சென்னை மௌவுண்ட்ரோட்டில் அவர் வேலைக்கு அமர்ந்தார். உலகநாதனூர் சம்பளம் குறைவே எனி

னும், இவ்வருவாய் வரவே, வீட்டு வாணிபம் தானே குன்றிவிட்டது. அதனல் மேலும் வறுமைத் தீ எழுநா விட்டு எரிந்தது. அதன் சூட்டைத் திரு. வி. க. வும் உணர்ந்தார். தம் இளமைப் பருவ எண்ணங்களைப் பல வழியில் ஓடவிடாமல் ஒரு வழியில் செலுத்த நினைத்தார். தமிழாய்தலும் சுதந்திரமாய்த் திரிதலும் குறைந்தன. அன்னையாரோ, அண்ணனோ, "வேலைக்குப் போ" என்று ஒருநாளும் கூறினரில்லை. எனினும் தேவை, திரு. வி. க. வை "வேலை தேடிப் போ" என விரட்டியது.

## முயற்சியில் தோல்வி

திரு. வி. க. வின் தமையனாரின் மாமனார் ஆலப்பாக்கம் சிதம்பரனார் ஒரு நாள் மருமகன் வீட்டிற்கு வந்தார். திரு. வி. க. வின் நிலையை அறிந்தார்; சுந்தரத்துக்கு ஒரு வேலை தேட முனைந்தார்; பின்னி கம்பெனியில் வேலை வாங்கித் தருவதாகக் கூறினர். அதன்படியே நடைமுறை அனுபவங்கள் பலவற்றைக் கூறித் திரு. வி. க. வை அழைத்துக்கொண்டு போனர்; தம் எசமானர் ஆகிய சௌகாரின் ஆதரவை நாடினர். சௌகார் சுந்தரத்தை ஸிம்சன் துரையிடம் அழைத்துக்கொண்டுபோய் ஒரு வேலை தருமாறு வேண்டிக்கொண்டார். நண்பர் விருப்பத்தைத் தட்டாமல் ஸிம்சன் துரையும் திரு. வி. க. வின் நற்சான்றிதழ்களைப் பார்வையிட்டுக் கணக்கர் வேலை தருவதாய்க் கூறிக் கிழவரான ஒருவரை அழைத்துத் திரு. வி. க. வை அவரிடம் ஒப்படைத்தார். ஆனல் பெரியதுரை மூலம் வேலைக்கு வந்தது அக்கிழவருக்குப் பிடிக்கவில்லை. அதனல் நாளுக்கு நாள் சுந்தரனுருக்குக் கடின

மான வேலைகளைத் தந்தார். கிழவர் தம்மை வெறுப்பதையறிந்த கலியாணசுந்தரனார் துரையிடம் கோள் மூட்ட விரும்பாமல், ஒரு நாள் பகல் வேலைக்குப் போகாமல் சிதம்பரனாரிடம்போய் நிலைமையை விளக்கிக் கூறினார்.

ஆலப்பாக்கம் சிதம்பரனார் சுந்தரனாரை மறுநாள் வால்காட் பிரதர்ஸ் கம்பெனிக்கு அழைத்துச் சென்றார். மானேஜர், திரு. வி. க. வை நோக்கி எழுத்தாளர் (Copyist) வேலை தருவதாகக் கூறினார். அதையும் திரு. வி. க. வேண்டாம் என்று மறுதலித்தார். அம் மறுப்பைக் கேட்ட மானேஜர், "இவ்விளைஞன் ஒருவரிடத்தும் ஊழியஞ் செய்பவனாகக் காணப்படவில்லை" என்று மொழிந்து சில புத்திமதிகள் சொல்லி அனுப்பினார்.

ஸ்பென்ஸரில் குமாஸ்தா

பின்னர், அவர் ஸ்மித் கம்பெனியின் படி ஏறி இறங்கினார். கதிரைவேலரின் பகைவர் அக் கம்பெனியிலிருந்ததால், அங்கும் வேலையின்றித் திரும்பினார். இறுதியாக ஸ்பென்ஸர் கம்பெனியில் ஒரு குமாஸ்தா வேலை காலி யிருப்பதாயறிந்து, அக் கம்பெனியில் பணிபுரிந்துவந்த ஒருதோழராகிய இராயப்பேட்டை வடிவேலர் உதவியுடன் கம்பெனி மானேஜரைத் திரு. வி. க. நேரில் போய்ப் பார்த்தார். பார்க்கர்துரை கலியாணசுந்தரனாரைச் சோதனை செய்து 'காட்லாக்' (Catalogue) பிரிவில் குமாஸ்தாவாக ஆக்கினார். வழக்கம்போல் திரு. வி. க. தம் கையெழுத்து நன்றாயிராது என்பதை எடுத்துரைத்தார். ஆனால் பார்க்கரோ பொறுமையாய், "எல்லாருக்குமா கையெழுத்து நன்றாயிருக்கும்?"

என்று கூறித் தேற்றித் தம் கையெழுத்தும் நன்கு யிராததைக் காட்டி வேலையை ஏற்றுக் கொள்ளும்படி ஊக்கினர். திரு. வி. க. பார்க்கரின் அன்பை வியந்து நல்லகாலமாய் அவ்வேலையிலமர்ந்தார். துரையால் வேலையின் தன்மை விளக்கப்பட்டது. திரு. வி. க. மூன்றே திங்களில் குவிந்து கிடந்த வேலையைக் குறைத்து அலுவலகத்தில் ஒழுங்கை நிலைக்கச் செய்தார். ஒழுங்கு ஊராளுமல்லவா? அவர்க்கு ஏற்றவனாய் ஒரு நல்ல வேலையாளும் கிடைத்தான். இதனால் திரு. வி. க. விற்குச் சம்பளத்தோடு நல்ல ஓய்வும் கிடைத்தது.

### கதிரைவேலரின் வரலாறு வரைதல்

துரையினால் நல்ல பெயர் எடுத்த திரு. வி. க. ஓய்வு நாளை வீணாக்காவல், பல நூல்களைப் படித்தும் பாடல்கள் யாத்தும் வந்தார்; கட்டுரைகளும் வரைந்தார். தம் தமிழாசிரியரின் வரலாற்றையும் ஓய்வு வேளையில் சிறுகச் சிறுக எழுதி முடித்தார்.

### அரசியல் உணர்ச்சி

அந்நாளில் ஆங்கிலேயரால் ஏற்பட்ட வங்காளப் பிரிவினையை ஒட்டி எழுந்த சுதேச இயக்கம் இந்தியா எங்கும் காட்டுத் தீப்போல் பரவி ஓங்கி வளரலாயிற்று. **விபின சந்திரபாலர்** பிரிவினையைக் கண்டித்துப்பேசினர். அவர் பேச்சு நாட்டுப் பற்றை எங்கும் ஓங்கச் செய்தது. அதே நேரத்தில் லாலா லஜபதிராய் என்ற பாஞ்சால சிங்கம் நாடு கடத்தப்பட்ட கொடுமை அதை மேலும் வளர்த்தது. வங்காளத்திலிருந்து அரவிந்தரால் நடத்தப்பெற்ற 'வந்தே மாதரம்' என்ற இதழ், நெருப்பிற்கு நெய் வார்த்தாற்போல, நாட்டுப்பற்றை யூட்டும்

கட்டுரை பல தாங்கி வந்தது. திரு. வி. க. இச்செய்திகளை யறிந்து, 'வந்தே மாதரம்' பத்திரிகையையும், சென்னைப் பத்திரிகைகளையும் வாங்கி மிகுந்த ஆர்வத்துடன் படித்து வந்தார். படித்த செய்திகளை ஸ்பென்ஸர் கம்பெனி ஊழியர்களுக்கு எடுத்துரைப்பதும், படித்துக் காட்டுவதுமாய் இருந்த திரு. வி. க. வை வந்தே மாதரப் பிரசாரகன் என்று ஐரோப்பிய துரைமார்கள் கருதினர்.

விலகல் கடிதம் தருதல்

முடிவில் ஒரு நாள் மானேஜிங் டைரக்டர் திரு. வி. க. வை நேரில் அழைத்துக் கம்பெனி ஊழியர்களுக்குப் பத்திரிகை படித்துத் தெரிவிப்பது குற்றம் என்று கூறி எச்சரித்தார். அடிமை வாழ்வை நஞ்செனமதித்த திரு. வி. க. அதற்காக வருந்தினர்; யோசித்துப் பார்த்தார். வேலையை விட்டு விலகுதலே தக்கது என்று எண்ணி, நடந்ததை, தம் தமையனாரிடமும் கூறினர். பிற்பகல் கம்பெனி வேலைக்குப் போனர்; விலகுதல் கடிதம் தந்தார். நிலைமையைக் கேட்டுணர்ந்த அதிகாரிகள் ராஜினாமாச் செய்ய வேண்டாம் என்றும், அவர் வேலையில் கம்பெனிக்கு நல்ல நம்பிக்கையும் மதிப்பும் உண்டென்றும் பல நன்மொழிகள் கூறினர். ஆனல் அதற்கு திரு. வி. க. இசையவில்லை. திரு. வி. க. வின் சுதந்திரப் பற்றையும் நேர்மையையும் கண்டு மகிழ்ந்த அதிகாரி அவர் விலகுவதற்கு வருந்தி, சிறந்த ஒரு நற்சான்றிதழும் வழங்கித் தம் அன்பை வெளியிட்டார். மீண்டும் எந்தக் கம்பெனியிலும் சுந்தரனர் வேலைக்குப் போக விரும்பவில்லை. 1908-இல் கம்பெனி வாழ்வு முற்றுப் பெற்றது.

## உமாபதி குருப்பிரகாசம் அச்சகம்

அந்நியரின் கீழ் அடிமை வாழ்வை அறுத்தெறிந்த திரு. வி. க., தம் தமையனுர் திரு. வ. உலகநாதர் நண்பர் சிவசங்கரர் முதலியவர்களுடன் கூடிப் பல நினைந்தனர். அவர்கள் ஆலோசனையின் பயனுக ஓர் அச்சகம் வைப்ப தென முடிவு செய்தனர். ஸ்ரீ பாலசுப்ரமண்ய பக்த ஜன சபையில் இக் கூட்டம் நடந்தது. அச்சபையின் தலைவர் இராசப்பா என்பவர் அச்சகத்துக்கு "உபாபதி குருப்பிரகாசம் பிரஸ்" என்று பெயர் வழங்கினுர்.

சிவசங்கரனுரின் கூட்டுறவால் அச்சகம் தொடங் கப் பெற்றது. அச்சகத்துக்கு வேண்டிய பொருள், தம் அன்னையாரின் நகையை விற்றுவந்த தொகையையும் ஏற்கெனவே கையிலிருந்த சிறு தொகையையும் சங்கர னுரின் உதவியும் கொண்டு சேர்க்கப்பட்டது. தம் நகையையும் மைந்தர் நலங் கருதியளித்த அன்னை சின் னம்மாளின் அருள்தான் என்னே! இவ் வச்சகத்தி லிருந்து கலியான சுந்தரனுரால் எழுதப்பெற்ற குறிப் புரையுடன் பெரிய புராணம், சஞ்சிகை சஞ்சிகையாக வெளியிடப்பெற்றது. அத்துடன் திரு. வி. க. அவர் களின் மேற்பார்வையில் திருமந்திரம் என்ற நூலும் வெளிவந்தது. வெளி வேலைகளுஞ் சில செய்யப்பட்டன. என்ன செய்து என்ன பயன்? இவ்வாறு ஏறத்தாழ இரண்டாண்டுகள் கழிந்தன. அச்சகத்தில் பெருத்த நஷ்டம் ஏற்பட்டது. அதை அடைக்க அச்சகத்தையே விற்க வேண்டிய நிலையும் ஏற்பட்டது. முடிவில் சகோ தரர் இருவரும் வேலையின்றி வாளா கிடக்கவேண்டிய வர் ஆயினர். குடும்பம் புயலிடைப்பட்டு கலமாயிற்று. "பட்ட காலிலே படும்; கெட்ட குடியே கெடும்"

என்பது மெய்யாயிற்று. அந்நாட்களில் திரு. வி. க. பார்த்தசாரதி பெருமானை எண்ணி எண்ணி ஆறுதல் அடைவார். கடற்கரையையே புகல் இடமாகக் கொண்டு மனம் தேறுவார்.

## ஆயிரம் விளக்குப் பள்ளி

திரு. வி. க. தம் வகுப்பு நண்பரான டானியல் சிங் என்பவரை ஒரு முறை எங்கோ சந்தித்தார். அவர் திரு. வி. க. வை நோக்கி 'ஆயிரம் விளக்குப் பள்ளியில் ஆசிரியர் வேலைகள் காலியுள்ளன; போய் முயல்வோம், வாருங்கள்' என்று ஊக்கினார். ஆசிரியர் தொழிலில் புகத் திரு. வி. க. வுக்கு முதலில் மனமில்லை. டேனியல் அது புண்ணியத் தொழில் என்று கூறித் திரு. வி. க. வை வற்புறுத்தி அழைத்துச் சென்றார். இருவரும் தலைமையாசிரியர் ஜான் இரத்தினம் அவர்களைக்கண்டு பேசினர். அடுத்தநாள் முதலாக இருவரும் ஆசிரியர் களாயினர். திரு. வி. க. முதற் படிவத்திற்கும், டானி யல் மூன்றாம் வகுப்புக்கும் ஆசிரியர்களாயிருந்தனர். அப் பள்ளியிலேதான் நம் சுந்தரனார் ஆறாண்டுகள் தொடர்ந்து பணி புரிந்தார். அங்கு நிகழ்ந்த சில நிகழ்ச்சிகளை நோக்குவோம்:

## தலைமையாசிரியர் நட்பு

ஜான் இரத்தினம் தமிழார்வம் உடையவர்; டானி யல் சிங் மூலமாய்த் திரு. வி. க. தமிழாசிரியர் என்ப தறிந்தார். ஒரு நாள் சுந்தரனார் பாடம் நடத்திய வகுப் பிற்கு வந்து, சுந்தரனாரின் பாடம் சொல்லும் திற மையை உணர்ந்தார். திரு. வி. க. வின் தமிழறிவை மேலும் பருக விழைந்து ஜான் இரத்தினம், மாலையில்

அவரைத் தம் வீட்டிற்குத் தனியே வரவழைத்தார். திரு. வி. க. திருக்கோவையாரில் 'ஆனந்த வெள்ளத்து' என்ற பாடலுக்குப் பொருந்திய விரிவுரையைத் திருந்தக் கூறினர். தமிழ்ச் சொற்பொழிவு இரவு எட்டு மணி வரையும் நீண்டது. முடிவில், "உங்கட்கு எவ்வளவோ வேலையிருக்கும்; யான் நீண்ட நேரம் போக்கினேன்" என்று சுந்தரனர் பணிவுடன் கூறினர். ஜான், தமிழின் மாண்புணர்ந்தவர்; திராவிட தூதன் என்ற வார வெளியீடும் நடத்தியவர். அவர் திரு. வி. க. வின் தமிழறிவைக் கேட்டு ஆனந்த வெள்ளத்தில் மூழ்கினர். "தமிழுக்கு மணிக் கணக்கு ஏது?" என்று கூறி, ஒரு தமிழ்ப் புலவனை ஆயிரம் விளக்குப் பள்ளி அடைந்ததற்கு இறைவனுக்கு வணக்கம் செலுத்தி, மகிழ்ச்சியுடன் அனுப்பி வைத்தார். திரு. வி. க. விற்குத் தமிழருமை யறிந்த தலைமையாசிரியரின் கீழ்ப் பணி புரிவதில் பெரு மகிழ்ச்சி ஏற்பட்டது.

### உத்தியோக உயர்வு

மறுநாட் காலை திரு. வி. க. விற்குத் தலைமையாசிரியரிடமிருந்து ஓர் உத்தரவு வந்தது. அதன்படி அவர் இரண்டு, மூன்றும் படிவங்களுக்குத் தமிழ் கற்பிக்க வேண்டியவரானர். திரு. வி. க. வின் திறமைக்கு ஏற்ப மேலும் அவர் வருவாயைப் பெருக்க எண்ணிய ஜான் இரத்தினம் அப்பள்ளியில் 'வெஸ்லியன் டெக்னிகல் இன்ஸ்டிட்யூட்' ஒன்றை ஏற்படுத்தி அதில் திரு. வி. க. வை மாலைதோறும் 'புக்கீப்பிங்' பாடஞ் சொல்ல ஏற்பாடு செய்தார். தலைமையாசிரியருக்கும் தமிழாசிரியருக்கும் இடையே நிலவிய உழுவலன்பு, கெழுமிய நட்பாக வளர்ந்து வந்தது. சுந்தரனர் அப்பள்ளியை

ஒரு கலைக் கோயிலாகக் கருதி வழிபட்டு வந்தார். அப் பள்ளியின் சூழலே திரு. வி. க. விற்கு உயர்வு தாழ்வு கருதாத மனப்பான்மையை ஊட்டியது; அன்பின் பெருமையை அறிவித்தது; மக்கள் தொண்டின் மாண்பை விளக்கியது; ஆதி திராவிடப் பிள்ளைகளுக்கு என்று ஏற்பட்ட பள்ளி அது. ஜாதி வெறியின்றிக் கிறிஸ்தவப் பாதிரிகள் புரிந்த அரும் பெருந்தொண்டுகள் திரு. வி. க. வையும் ஓர் உண்மைக் கிறிஸ்துவனாகத் தம் சமயத்திலிருந்தபடியே வாழச் செய்தது.

### சோதனையில் நற்பேர்

ஆண்டுதோறும் கல்வி இலாகா அதிகாரிகள் தணிக்கை நடைபெறுவது வழக்கம். சுந்தரனார் சேர்ந்த முதலாண்டில் பள்ளிக்கு வந்த கல்வியதிகாரி அவர் தமிழ்ப்பாடம் நடத்தும் முறையை அறிந்து மகிழ்ந்தார். மீண்டும் இரண்டு ஆண்டுகள் அவ்வதிகாரியே சோதனைக்கு வந்தார். அப்போதெல்லாம் திரு. வி. க. வின் வகுப்பைத் தணிக்கைசெய்யாமல் தமிழாராய்ச்சியிலீடுபட்டிருந்து செல்வது அவர் வழக்கம்.

### புலி வருதல்

நான்காம் ஆண்டு வந்த கல்வியதிகாரி பதவிச் செருக்கு மிக்கவர். அவர் வரும்போதெல்லாம், ஆசிரியர்கள் "புலி வருகிறது; புலி வருகிறது" என்று தங்களுக்குள் நகையாடுவார்கள். அந்த அதிகாரியைக் கண்டால் எல்லோருக்கும் உடல் நடுக்கந்தான் உண்டாகும்.

கல்வியதிகாரியாகிய புலி, வகுப்புகளில் நுழைந்து ஆசிரியர்களையும் மாணவர்களையும் அச்சத்தால்

அடித்து வீழ்த்திவிட்டுத் திரு. வி. க. வகுப்பிற்கு எதிரிலிருந்த நான்காம் வகுப்பினுள் நுழைந்தது. அங்கிருந்து புலி உறுமிக்கொண்டே திரு. வி. க. வை அழைத்தது. அவர் அவ்வகுப்புக்குச் சென்றார். அதிகாரி, திரு. வி. க. வை அவ்வகுப்பிற்குச் சொல்வதெழுதல் (Dictation) செய்யுமாறு கூறிவிட்டு வேறு வகுப்புக்குள் நுழைந்தார். சுந்தரனார் அப்பணியை முடித்துவிட்டுத் தம் வகுப்புக்குத் திரும்பினார். மீண்டும் அக் கல்வி அதிகாரி நான்காம் வகுப்பில் நுழைந்தார். அங்கே திரு. வி. க. வைக் காணேம். கோபங் கொண்டு அவரை மீண்டும் அழைத்தார். "என் உத்தரவு இல்லாமல் ஏன் உம் வகுப்பிற்குப் போனீர்?" என்று சீறினார். அவர் பலகைகளை எடுத்தார்; அவை திருத்தப்படாமல் இருக்கக் கண்டார்; அதிகாரி கோபம் கொண்டார்; "ஏன் திருத்தவில்லை?" என்று உறுமினார். "நீங்கள் திருத்தும்படி கூறவில்லையே!" என்றார். "சொல்வதெழுதல் என்றால் திருத்தலும் அடங்கும்" என்று கூறிப் பலகைகள் இரண்டொன்றைப்பார்த்துவிட்டுத் திரு. வி. க. வைப் "போம்" என்று அனுப்பினார். இவ்வாறு அந்நாள் கழிந்தது.

### புலியை வீழ்த்தல்

மறுநாள் தணிக்கையில் சுந்தரனார் வகுப்புக்குப் பலமுறை கல்வி அதிகாரி வந்தார். முதற் படிவத்தில் திரு. வி. க. கணக்குப் பாடம் நடத்திக்கொண்டிருந்தபோது அங்கு வந்த கல்வியதிகாரி சிறிதுநேரம் சோதனை நிகழ்த்தினார். பிறகு மனக்கணக்கு ஒன்று கொடுத்தார். பிள்ளைகள் யாவரும் விடை எழுதிய பிறகு, ஒரு மாணவனை நோக்கி, "எவ்வாறு விடை கண்டாய்?" என்று

கேட்டார். அம்மாணவன் கூறிய முறையைத் தவ றென்று கருதிய அதிகாரி மேலும் இரண்டொரு மாண வரைக் கேட்க, அவர்களும் அதையே கூறினர். திரு. வி. க. வை நோக்கி, "நீர் கற்பித்த முறை இதுதானு?" என்றுர். திரு. வி.க., "ஆம்" என்றுர். அதிகாரி, "இம் முறையில் செய்வது தவறு" என்று எரிந்து விழுந்தார். திரு. வி. க. தம் முறையே சரி என்று அதிகாரியுடன் மாறு கொண்டு அஞ்சாமற் கூறினுர். அதனுல் கோப மிக்கவராய்க் கல்வி அதிகாரி தலைமையாசிரியர் அறைக் குள் நுழைந்தார். அதற்குள் சுந்தரனுர் தம்முறையே சரி என்றும் அதிகாரி கூறிய முறை தவறே என்றும், அதை எப்போதும் மெய்ப்பிக்க முடியும் என்றும், அதற்காக அதிகாரி கோபித்துக் கொண்டால் தம் வேலையை அப்போதே விட்டுவிடத் தயாராயிருப்பதாக வும், அன்புக்கு எளிமையாவதன்றி அதிகாரத்துக்குத் தாம் அடிபணிய முடியாதென்றும், தாம் அதிகாரத் துக்கு அஞ்சி மானத்தை விற்கும் பிறவி அன்று என் றும் ஒரு கடிதத்தின் மூலம் தம் கருத்தைத் தெரிவித்து, அக்கடிதத்தை மாணவர் மூலம் அதிகாரிக்கு அனுப்பி னுர். அதிகாரி அக்கடிதத்தைப் படித்துத் தம் தவற்றை உணர்ந்துகொண்டார். தலைமையாசிரியர் முன்னிலை யில் சுந்தரனுர் அதிகாரியிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார். அதற்கு அதிகாரி, "யானல்லவோ மன் னிப்புக்கேட்கவேண்டும்" என்றுர். இதனுல் திரு.வி.க. வின் திறமை பலராலும் பாராட்டப்பட்டது.

## திருமண முயற்சி

யாழ்ப்பாணம் ஆறுமுக நாவலர் மாணவர் திரு. கதிரைவேலர் தொடர்பாலும், வேதாந்த சித்தாந்த

நூல் அறிவுப் பயிற்சியாலும், திரு. வி. க. அவர்களுக்குத் திருமணத்தில் எப்படியோ ஒருவித வெறுப்பு ஏற்பட்டிருந்தது. தம் அன்னையார் தமது போக்கைக் கண்டு வருந்துவதையும் பொருட்படுத்தவில்லை. இதையறிந்த அஷ்டாவதானம் பூவை. கலியாண சுந்தரனார், திரு. வி. க. வை ஏதேனும் ஒரு மடத்துக்கு அனுப்ப விரும்பி அவரது இசைவையறிய முயன்றார். அதனைத் தலைமையாசிரியர் ஜான் இரத்தினம் அறிந்தார். திரு. வி. க. விற்குத் தம் தோட்டத்திலிருந்த ஒரு மரத்தைக் காட்டி அது பயன்படும் வழிகளையும் விளக்கி, "தொண்டுக்குத் தனி வாழ்க்கை கூடாது; மணவாழ்க்கை வேண்டும்" என்று இனிது புகன்றார். இரத்தினத்தின் பேச்சு திரு. வி. க. விற்குப் பொருத்தமாயிருந்தது. அதனால் அவர் திருமணத்துக்கு ஒருவாறு இசைவை அளித்தார்.

### மண நிகழ்ச்சி

திரு. வி. க. திருச்சி கிருஷ்ணசாமி அவர்களின் திருமகளார் கமலாம்பிகையைத் தம் வாழ்க்கைத் துணைவியாக 13-9-1912-ஆம் நாளில் ஏற்றார். திருமணம் மிகவும் சிறப்புடன், மணமகளின் அம்மான் பூ. மு. முருகேசனார் இல்லத்தில் நிகழ்ந்தது. தலைமை ஆசிரியர் ஜான் இரத்தினம் முதலிய கிறிஸ்தவத் தோழர்களும், பூவை கலியாணசுந்தரனார் போன்ற சைவப் பெரும் புலவர்களும் மண விழாவில் கலந்து தத்தம் மகிழ்ச்சியைப் பரிசுகளாகவும் வாழ்த்துக்களாகவும் வெளிப்படுத்தினர். சுருங்கக் கூறின், திரு. வி. க.வின் திருமணம் கிறிஸ்தவமும், சைவமும், தமிழும் இணைந்துழைத்த முயற்சியின் பயன் எனக் காண்ப

வரைக் கருதச் செய்தது. தம் ஊருக்குத் திரும்பிய அன்றிரவு திருச்சி சச்சிதானந்தம் பிள்ளை அவர்களால் வள்ளித் திருமணச் சொற்பொழிவும் நிகழ்த்தப் பெற்றது.

## இல்வாழ்க்கைத் துணைவி

சுந்தரனாரின் மனைவியார் கமலாம்பிகையார் இளமையிலேயே தாய் தந்தையரை இழந்து, பெரிய தந்தையரால் அருமையாய் வளர்க்கப் பெற்றவர். நற் குண நற்செயல்கள் நிரம்பியவர்; கல்வியறிவும் சிறி தளவு பெற்றவர்; திரு. வி. க. தம்மருமை மனைவி யார்க்குப் போதிய அளவு தமிழ் நூல்களிற் பாடஞ் சொல்லி வைத்தார். மாமியார் மனங் கோணாமல் வீட்டில் அமைதி நிலவுமாறு வாழ்ந்து வந்தார் கமலாம் பிகை. அவ்வம்மையார் பொறுமையே அணிகல மாகக் கொண்டவர்; தம் பிற்காலப் பொறுமைக்குத் தம் மனைவியாரே காரணம் என்பார் திரு. வி. க. இவ் வம்மையார் ஓயாத உழைப்பாளி; ஓரகத்திகளுடன் ஒரு நாளும் சண்டை சச்சரவுகள் இடாதவர்; அவர் களைப் பற்றிக் கோள் கூறாதவர்; விருந்தோம்புதல், சுற்றந் தழுவுதல், இனியவை கூறல், அடக்கம் முதலிய திருக்குறள் அதிகாரக் கருத்துக்களுக்குக் கமலாம்பிகை ஓர் இலக்கியமாய் வாழ்ந்தார். இப்பெருமாட்டியார் நகைப்பித்து அற்றவர். ஆயின் சிறு குழந்தைகளிடம் அன்பு செலுத்திச் சிறு கதைகள் கூறி அவர்களை மகிழ் வித்துத் தாமும் மகிழ்ந்து வாழ்ந்தவர்; அம்மையா ருக்குச் சிக்கனமும் இயற்கை எழில் காணும் ஆவலும் இயல்பாயிருந்தன. அம்மையார் தம் கணவன் கருத் தறிந்து ஒழுகினார். தம் மனைவிக்குக் கல்வி கற்பிக்கக்

கூட்டுக் குடித்தனம் தடையாயிருப்பது அறிந்து திரு. வி. க. தனிக் குடித்தனம் வைக்க எண்ணியபோதும் கமலாம்பிகை அதைத் தடுத்துக் கூட்டுக் குடித்தனமே சிறந்தது என எடுத்துக் காட்டினர்.

### மக்கட் செல்வம்

இத்தகைய அருங்குணங்கள் அமைந்த மனைவியால் சுந்தரனர் வாழ்க்கை ஆறு ஆண்டுகள் கவலையற்று நடந்தது. திரு. வி. க. "இல்லதென் இல்லவள் மாண்பானல்?" என்றபடி மனைவியால் எல்லா நன்மைகளும் நிரம்பப்பெற்று மனமகிழ்ந்தார். அம்மகிழ்ச்சியின் நிறைவாய்க் குழந்தைகள் இரண்டு பிறந்தன. ஒன்று ஆண்; மற்றொன்று பெண். ஆனல் அவ்விரு குழந்தைகளும் இளமையிலேயே இயற்கை எய்தின. பெற்றோர்க்கு இது பேரிடியாயிருந்தது. திரு. வி. க. வைக் குடும்பக் கடலில் அழுத்தி அவர்தம் பிற்கால உலகப் பொதுத் தொண்டுக்கும் இடையூறாய் இருக்கக் கூடாது என்றே குழந்தைகளை இளமையிலேயே இயற்கையன்னை ஆட்கொண்டனள் போலும்.

### மனைவியின் பிரிவு

பரம்பரை உரிமையாய் வந்த என்புருக்கி நோய் கமலாம்பிகையைப் பற்றியது. என்புருக்கி அவர்தம் எழிலுடலை உருக்கிக்கொண்டே வர, கணவன்பாலிருந்த அன்பு அவர் நெஞ்சினை உருக்கிக் கொண்டே வந்தது. முடிவில் 18-9-1918-இல் அம்மையார் கடவுளடி சேர்ந்தார். திரு. வி. க. துன்பப் பெருங்கடலில் ஆழ்ந்தார்.

### மறுமண மறுப்பு

இல்லறத் தலைவி பிரிந்து இரண்டு திங்களும் ஆக வில்லை. அதற்குள் திரு. வி. க. வின் சுற்றத்தார் அவருக்கு மறுமணம் புரிய முனைந்தனர். அப்போது தேசபக்தன் பத்திரிகாசிரியராய்ப் பேரும் புகழும் பெற்றிருந்த பெருஞ் செல்வர்கள் திரு. வி. க. விற்குப் பெண் கொடுக்க முன் வந்தனர். அவர் இலட்சாதிபதிகளின் உறவைத் துச்சமாய் மதித்தார். ஒருத்தியைக் காதலித்த உள்ளத்தில் மற்றொருத்திக்கு இடமில்லை என்று மறுமணத்தை மறுத்துவிட்டார். மனைவியின் மரணத்தின்போது திரு. வி. க. விற்கு வயது முப்பத்தைந்து தான். சுந்தரனார், இளைஞராக இருந்தும் மறுமணமின்றியே வாழ்க்கையை நடத்தினார். அவர் எழுபதாம் ஆண்டில் இயற்கை எய்தியது வரைக்கும் வேறொருத்தியை மனதாலும் நாடாமல் செம்மையான வாழ்வு நடத்தினர் எனின் அவர் மன உறுதியை என்னென்பது? பின்னாளில் ஒரு முறை கிறித்துவத் தோழர்கள் சங்கத்தில் அவரது ஆற்றொழுக்கான அரிய சொற்பொழிவைக் கேட்டுத் தன் உள்ளத்தை அவர்பால் கொள்ளை கொடுத்த கிறித்துவ மதத்தைச் சார்ந்த அழகிய ஓர் இள நங்கை திரு. வி. க.வை மணந்துகொள்ள எவ்வளவோ மன்றாடியும், அவருடைய மன உறுதி குலையவில்லை. கிறித்துவ மதத்தில் அப்பெரியார்க்கு வெறுப்பில்லை; மறுமணத்தில்தான் வெறுப்பு.

### வெஸ்லி கல்லூரித் தமிழாசிரியர்

திரு. வி. க. வின் மண நிகழ்ச்சி முடிந்த சில திங்களுக்குள், வெஸ்லியன் பள்ளியை மூடிவிடுவதென்ற

எண்ணம் அதை நடத்தி வந்தவர்களுக்குள் ஏற்பட்டது. காரணம் அப்பள்ளியின் நிருவாகத்துக்கு ஏற்ற வருவாய் குறைந்துபோனதே. அதே சமயத்தில் வெஸ்லியன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராய் இருந்தவரும், பல நூல்களுக்கு உரை வகுத்தவருமான திரு. சே. கிருஷ்ணமாச்சாரியார் ஓய்வுபெறப் போவதாகச் சேதி உலவிற்று. ஜான் இரத்தினம் திரு.வி.க.வை அவ்வேலையைப் பெற முயற்சி செய்யுமாறு தூண்டினர். பலர் அப்பதவிக்குப் போட்டியிட்டனர். திரு. மறைமலை யடிகள், கா. ரா. நமசிவாய முதலியார், தோட்டக்காடு இராம கிருஷ்ணனர், ஜான் இரத்தினம், சச்சிதானந்தம் பிள்ளை முதலிய பெரியோர் திரு. வி. க. விற்கே கல்லூரித் தமிழாசிரியர் பணியை அளிக்குமாறு பெருமுயற்சி செய்தனர்.

### தடையும் வெற்றியும்

ஆனல் திரு. வி. க. அச்சமயத்தில் சுயாட்சிக் கிளர்ச்சியில் பற்றுக்கொண்டிருந்தார். இக்கல்லூரியில் சில மாணவர்களுக்குக் கிடைத்த கசையடியைப் பற்றி ‘நியூ இந்தியா’ பத்திரிகை கண்டித்துக் கிளர்ச்சி செய்தது. அப்பத்திரிகை அன்னிபெசண்ட் அம்மையாரைத் தலைவராய்க் கொண்டது. அவ்வம்மையாரின் தலைமையில் நிகழ்ந்த இராயப்பேட்டைச் சகோதர சங்கத்தில் திரு. வி. க. ஒரு நிருவாகியாயிருந்தார். தியோசாபிகல் சங்கத்துக்கும் கிறித்துவச் சங்கத்துக்கும் அந்நாட்களில் இணக்கமில்லை. தியோசாபிகல் சங்கத் தலைவரும் அன்னிபெசண்ட் அம்மையாரே ஆவர். சகோதர சங்கத்தின் சார்பில் நடத்தப்பட்ட பாடசாலைகள் பலவற்றுள் ஒன்று பவானி பாலிகா பாடசாலை. அதன் நிருவாகியும்

திரு. வி. க. வே. இப்பாடசாலை வெஸ்லியன் பெண் பள்ளிக்கு எதிரில் இருந்ததால், அதற்குப் போட்டியாக எழுந்தது என்று பேசப்பட்டது. இவற்றையெல்லாம் ஒன்றுமிரண்டுமாகச் சேர்த்துத் திரு. வி. க.விற்கு எதிராகச் சில விஷமிகள் சூழ்ச்சி செய்தனர். ஆயினும் முடிவில் ஜான் இரத்தினம் அவர்களின் முயற்சியால், கல்லூரி அதிகாரி 1916-இல் திரு. வி. க.வைக் கல்லூரித் தமிழாசிரியராக்கினர்.

### தமிழாசிரியர்க்கு உரிமைபெறல்

இப்பள்ளியில் ஏறத்தாழ ஒன்றரையாண்டுகளே திரு. வி. க. தொண்டாற்றினர். அக்கால எல்லைக்குள்ளாகவே தம் உண்மையுழைப்பாலும், அறிவுத்திறமையாலும் கல்லூரித் தலைவரின் கழிபெரும் நட்பைப் பெற்றுக்கொண்டார். திரு. வி. க. தமிழாசிரியர்களுக்கு உள்ள குறைகளையும், அவர் சம்பளத்தின் போதாமையையும் தலைவர் ஏற்கத் தக்காங்கு எடுத்துரைத்து, சிறிது சிறிதாகப் பல நன்மைகளைத் தமிழாசிரியர்க்கு உண்டாக்கினர். தமிழாசிரியர் சம்பளமும் உயர்ந்தது. மக்களும் மாணவரும் மனங்கொளுமாறு கல்லூரியின் வெளியிலும் உள்ளுமாகப் பல சொற்பொழிவுகளாற்றிப் பலருடைய பாராட்டையும் பெற்றுர்.

### தேசபக்தன் தோற்றம்

அந்நிய ஆட்சியின் அடக்கு முறையை எதிர்த்து நாட்டு விடுதலைக் கிளர்ச்சி அச்சமயத்தில் நடைபெற்றது. கிளர்ச்சி வெள்ளம் திரு. வி. க.வையும் ஈர்த்துச் சென்றது. அடக்குமுறையை எதிர்த்த கிளர்ச்சியை ஒடுக்க அரசாங்கம், வேருெரு காரணத்

திற்காகத் தோன்றித் தமிழகத்தில் நிரம்பிய செல்வாக்குப் பெற்றிருந்த ஜஸ்டிஸ் கட்சி என்னும் நீதிக்கட்சியைத் தன் கைப்பாவையாக்க முயன்றது. ஜஸ்டிஸ் கட்சியும் ஓரளவுக்கு தேசவிடுதலைக் கிளர்ச்சியை ஒடுக்க ஆதரவாய் இருந்தது. அதனால் "தன் பகைவனுக்கு நண்பனும் தன் பகைவனே" என்ற கருத்துப்படி விடுதலை இயக்கத்தார் ஜஸ்டிஸ் கட்சியையும் பகைத்துக்கொண்டு கிளர்ச்சி செய்தனர். ஜஸ்டிஸ் கட்சிக்குத் தெலுங்கு, ஆங்கிலம், தமிழ் மொழிகளில் தினசரிகள் இருந்தன. அத் தினசரிகளுக்கு ஈடாக மறுப்பு அளிக்கவும், எதிர்க் கட்சியை நிலைக்காதபடி செய்யவும், விடுதலை இயக்க வீரர்கள் பலர் உழைப்பும் ஒற்றுமையும் தேசபக்தன் என்ற தினசரிப் பத்திரிகையை, வெளிவரச் செய்ய முயன்றன. திரு. வி. க. அம் முயற்சிக்குத் துணை போனார்.

## இதழாசிரியர்

திரு. வி. க நாட்டுப்பற்றால் உந்தப்பட்டார். காரணம் தம் தலைவர்களுள் ஒருவரான அன்னி பெசண்ட் அம்மையாரை அரசியலார், அவர் எழுப்பிய 'ஹோம் ரூல்' (சுயாட்சி) கிளர்ச்சி காரணமாகச் சிறைப்பிடித்ததே. சுந்தரனார், நண்பர்களும் கல்லூரித் தலைவரும் வேண்டாம் என்று தடுத்தும்கேளாமல், தம் தமிழாசிரியர் பதவியை 5-12-1917-இல் இராஜிநாமாச் செய்து விட்டார். 7-12-1917-இல் தேசபக்தன் ஆசிரியர் பீடத்தில் அமர்ந்து அரிய அனல் கக்கும் தலையங்கங்களின் மூலம் நாட்டுப்பற்றைப் பட்டிதொட்டிகளிலும் பரப்பி வந்தார். தேசபக்தன் ஆசிரிய பீடத்தை இரண்டரை ஆண்டுகள் திரு. வி. க. அணிபெறச் செய்தார்.

### நவசக்தி தோற்றம்

தேசபக்தன் நிருவாகிகளுக்கும் தமக்கும் ஏற்பட்ட சில கருத்து வேற்றுமையால் தேசபக்தன் ஆசிரியர் பதவியைத் துறந்து திரு. வி. க. வெளியேறினர். அவ் வாசிரிய பீடத்தில் அமர்ந்து பணியாற்றி வந்த அரிய உழைப்பிற்கிடையே தொழிலாளர்களுக்கு உரிமை வேண்டிச் சென்னைத் தொழிலாளர் சங்கத்தை 1918-ல் திரு. வி. க. தோற்றுவித்து உழைத்துவந்தார். அவ ருக்கு அதனுல் அரசியல் உலகிலும் தொழிலாளர் உலகி லும் நல்ல மதிப்பு ஏற்பட்டிருந்தது. ஆசிரியர் பதவி யைத் துறந்து சுந்தரனுர் வாளா இருப்பதைத் தொழி லாளர்கள் அறிந்து ஆளுக்கு ஒரு ரூபாயாக அவர்தம் சேவைக்குக் காணிக்கையாக ரூபாய் 5,000 வசூல் செய்த, பண முடிப்பைத் திரு. வி. க.விடம் ஒப்படைத் தனர். வேறு சில நண்பர்கள் ரூபாய் 2,000 அளித்தனர். இத்தொகையைக் கொண்டு, சோர்ந்திருந்த சுந்தரனுர் நவசக்தி பெற்றுர். தேசபக்தனை திரு. வி. க., "நவ சக்தி" என்ற சொந்த பத்திரிகை ஒன்றை 1920-இல், தொடங்கி வார இதழாக நடத்தி வந்தார். இத்தொழி லேயே ஏறத்தாழ இருபதாண்டுகள் தொடர்ந்து மேற் கொண்டார். நவசக்தி மூலம் காங்கிரஸ் கட்சிக்கும், தொழிலாளர்க்கும், தமிழ்மொழி வளர்ச்சிக்குமாகச் சுந்தரனுர் அவர்கள் உழைத்த உழைப்பு தென்னுட்டுச் சரித்திரத்தில் மறக்கப்படாத ஒரு படலமாகும்.

# 7. அரசியல் திருப்பணி

## காங்கிரஸ் எழுச்சி

அகில இந்திய காங்கிரஸ் கட்சியை இன்று யாவரும் அறிவர். மகாத்மா காந்தியாரால் இக்கட்சி உலகப் புகழ் வாய்ந்ததாயிற்று. இக்கட்சி இந்திய நாட்டில் அந்நியர் ஆட்சியை வேரறுக்கும் நோக்குடன் முதலில் தோன்றவில்லை. ஆனால் காலப்போக்கில், அந்நியர்க்கு இந்நாடு அடிமையாய் இருப்பதை இந்திய அறிஞர்கள் பலர் விரும்பவில்லை. சுய ஆட்சி உணர்வும் விடுதலை எழுச்சியும் அறிஞர்களை ஆங்கில ஏகாதிபத்தியத்திற்கு எதிராகக் கிளர்ச்சி செய்யத் தூண்டின. சர்வாதிகார அடக்குமுறை ஆட்சி, கிளர்ச்சித் தீக்கு நெய்போல வாய்த்தது. இந்தியரின் நலனை விரும்பிய பலரும் உடல் பொருள் ஆவியைப் பொருட்படுத்தாமல் காங்கிரஸ் கட்சியை வளர்க்க முற்பட்டனர். இப்படிக் கட்சித் தொண்டிலேயே காலமெல்லாம் கழித்த தியாகிகள் பலர். அவர்களில் தமிழகத்தில் தலைசிறந்தவர்கள் பலருண்டு; வடநாட்டிலும் பலருண்டு. ஜாதி, மதம், நாடு, மொழி என்ற வேறுபாடு கருதாது உழைத்த உத்தமர்கள் வரலாறுகளை நீங்கள் காங்கிரஸ் மகாசரித்திரம் என்னும் நூலில் தனியே படியுங்கள். இத்தகைய தேசபக்தர்களில் தேசபக்தன் இதழாசிரியராய் இலங்கிய திரு. வி. க.வும் ஒருவர்.

## நாட்டுப்பற்றில் கால்கோள்

சுந்தரனார் நான்காம் படிவத்திற் படித்தபோதே நாட்டுப் பற்றுடையவராய்ச் சுரேந்திரநாத பானர்ஜி,

ஜி. சுப்ரமணியனார், டாக்டர். நாயர், வி. கிருஷ்ணசாமி முதலியவர்களின் நாட்டுப்பற்றை வளர்க்கும் சொற்பொழிவுகளைக் கேட்டு வந்தார். 1907-ஆம் ஆண்டில் பாலகங்காதர திலகர் பெருமான் தலைமையில் தீவிரப் பிரசாரம் நாடெங்கிலும் பரவியிருந்தது. தென்னாட்டில் அப்பிரசாரத்தைத் தீவிரமாக்கியவர்கள் பலர். அவர்களுள் திருவாளர்கள் வ. உ. சி., சுப்பிரமணியசிவனார், பாரதியார், சுரேந்திரநாத் ஆரியா முதலியோர் சிலராவர். ஐ. சி. எஸ். படித்த அரவிந்தரால் நடத்தப்பட்ட வந்தேமாதரம் என்ற பத்திரிகையும், அன்னி பெசண்ட் அம்மையாரால் நடத்தப்பட்ட நியூ இந்தியா என்ற இதழும், திரு. ஸ்ரீநிவாசன் அவர்களால் வெளியிடப் பெற்ற இந்தியாவும் தென்னாட்டு மக்களைத் தட்டி எழுப்பின. அத்தட்டுதலுக்குத் திரு. வி. க. செவிசாய்த்தார். பாலகங்காதர திலகர், லாலா லஜபதிராய், விபின சந்திரபாலர் என்ற முப்பெருந் தலைவரும் ஆற்றிய ஒப்பருஞ் சொற்பொழிவில், திரு. வி. க. உள்ளம் அந்நாள் கதிரைவேலரிடத்தில் ஒன்றியிருந்தது போலக் கட்டுண்டது. மூவர்தம் சொற்பொழிவுகள் இளைஞர் நெஞ்சினை ஈர்த்தன.

பாஞ்சால சிங்கம் நாடுகடத்தப்பட்ட செய்தி, திலகர் பிரான் சிறைவாசம், தாதாபாய் நவரோஜியின் சொற்பொழிவு, அரவிந்தர் மீது நடந்த வழக்கு, ஜஸ்டிஸ் கட்சியின் அடக்குமுறை யாட்சி முதலியன திரு. வி. க.வை அரசியலில் முழு மூச்சுடன் ஈடுபடப் பிடர் பிடித்து உந்தின. சுந்தரனார் ஸ்பென்ஸர் கம்பெனி வேலையை விடுத்ததும், பிறகு தமிழாசிரியர் வேலையை உதறியதும் இந்த நாட்டுப்பற்றினாலேயே என்பது முன்னர் சொல்லப்பட்டது.

### சுய ஆட்சிக் கிளர்ச்சி

ஜஸ்டிஸ் சதாசிவனார் தொடர்பு சுந்தரனார்க்குக் கிடைத்தது. அதன்வழி அடையாற்றிலுள்ள பிரம ஞான சபைத் தலைவராகிய அன்னி பெசண்ட் அம்மையார் நட்பும் கிடைத்தது. அவ்வம்மையாரிடம் கண்ட கலைத்திறனும் அரசியலறிவும் சுந்தரனார்க்கு எய்ப்பினில் வைப்பாய் உதவின. இத்தொடர்பு சுய ஆட்சிக் கிளர்ச்சி (Home Rule Agitation) யில் அவரை ஈடுபடச் செய்தது.

### சகோதர சங்கம்

'நியூ இந்தியா' பத்திரிகைத் துணையாசிரியர் எம். சுப்பராய காமத் என்பவர் சுந்தரனாருடன் வலிய வந்து நட்புக்கொண்டார். இந்நட்பின் பயனாய் இராயப் பேட்டையில் 'சென்னைச் சகோதர சங்கம்' என்றொரு சங்கம் ஏற்படுத்தப்பட்டது. இச்சங்கம் சமுதாயப் பொதுநல சேவையில் ஈடுபட்டிருந்தது. இச்சங்கத்தின் ஆதரவில் ஏற்படுத்தப்பட்ட பள்ளிகள் பலவும் சுந்தரனாரின் மேற்பார்வையில் விடப்பட்டன.

### ஜஸ்டிஸ் கட்சி

அக்காலத்தில் சுய ஆட்சிக் கிளர்ச்சியை ஒடுக்க 'ஜஸ்டிஸ் கட்சி' என்னும் புதிய அரசியல்கட்சி தோன்றியது. அக்கட்சியினர் தமிழ், தெலுங்கு, ஆங்கிலம் ஆகிய மொழிகளில் தினத்தாள்கள் வெளியிட்டுத் தம் கொள்கையைப் பரப்பினர். அவற்றில் ஆங்கிலத்தாளுக்கு 'ஜஸ்டிஸ்' என்றும், தமிழ்த்தாளுக்குத் 'திராவிடன்' என்றும் பெயர். ஜஸ்டிஸ் கட்சிக்கு எதிராக அக்காலத்தே பல கூட்டங்கள் கூட்டப்பெற்றன.அவற்றில்

நம் சுந்தரனுர் தலையாய பங்குகொண்டு மக்கள் உள்ளத்தைக் கவரும் இனிய சொற்பொழிவுகள் ஆற்றி ஜஸ்டிஸ் கட்சியின் செல்வாக்கை நிலை குலையச் செய்தார். அவரது அரிய முயற்சியாலும் பல தலைவர்களின் ஆதரவாலுமே 'தேசபக்தன்' என்னும் பத்திரிகை துவக்கப் பெற்றது. அது 'ஜஸ்டிஸ்', 'திராவிடன்' ஆகிய பத்திரிகைகளின் கருத்துக்களை மறுத்து எழுதி மக்களிடையே நாட்டுப் பற்றை வளர்த்து வந்தது.

ஒருநாள் சென்னை டவுன் ஹாலில் ஜஸ்டிஸ் கட்சியின் சார்பில் ஒரு பொதுக்கூட்டம் கூடியது. அதில் அக்கட்சித் தலைவர்களில் ஒருவரான டாக்டர் நாயர் பேசினுர். திரு. வி. க. சில கேள்விகளை வரைந்து அவருக்கு அனுப்பிவைத்தார். டாக்டர் கேள்விகளுக்குத் தக்க பதிலைத் தந்தார். சுந்தரனுர் மேலும் சில கேள்விகளை நேருக்கு நேர் கேட்டார். கூட்டத்தினர் நாலாபக்கங்களிலுமிருந்து கூச்சலிட்டனர். கூட்டம் கலைந்தது. இச்செயலைக் கண்டு சுந்தரனுர் மனம் வருந்திஞர். ஆயினும் டாக்டர் மறுநாள் தம் பதிலை ஜஸ்டிஸ் பத்திரிகையில் எழுதுவதாகக் கூறிச் சென்ருர்; அவ்வாறே எழுதிஞர்.

அதுமுதல் திரு. வி. க. மாற்றுக் கட்சிக் கூட்டங்களில் கேள்வி கேட்கும் வழக்கத்தை விட்டொழித்தார். மற்ருெரு சமயம் எழும்பூர் ஏரி வெளியில் கூடிய கூட்டத்தில் டாக்டர் நாயர் பேசிக்கொண்டிருந்தார். சுந்தரனுர் ஒரு துண்டறிக்கை வெளியிட்டார். அதனுல் கூட்டத்தில் குழப்பம் உண்டாயிற்று. ஜஸ்டிஸ் கட்சியாருக்கும் சுய ஆட்சியாளர்க்கும் கைகலப்பு ஏற்பட்டது. இக் கட்சியினுல் சுய ஆட்சிக் கட்சிக்கு ஆதரவு பெருகிற்று.

### பெண்ட்லண்ட் பிரபு

லார்ட் பெண்ட்லண்ட் பிரபு அப்போது சென்னை மண்டல கவர்னராக இருந்தார். அவர் அடக்குமுறையில் கருத்திருத்தினர்; சுய ஆட்சிக் கிளர்ச்சித் தலைவர் அன்னி பெசண்ட் அம்மையாரையும், அவர்தம் இரு கைகளாக விளங்கிய அருண்டேலையும், வாடியாவையும் 1917-ஆம் ஆண்டில் சிறைப்படுத்தினர். அதனால் சுய ஆட்சிக் கிளர்ச்சி வலுப்பட்டது. அப்போதுதான் சுந்தரனாரும் கல்லூரி வேலையைவிட்டு வெளியேறினர்.

### சென்னை மாகாணச் சங்கம் தோன்றுதல்

ஜஸ்டிஸ் கட்சிக்கு எதிராகச் சென்னை மாகாணச் சங்கம் என்னும் இயக்கம் ஒன்றைப் பலர் கூடி ஏற்படுத்தினர். இம் மாகாணச் சங்கத் தலைவர் திவான்பகதூர் கேசவனர், துணைத் தலைவர்கள் லார்ட் கோவிந்ததாஸ், ஈரோடு ஈ. வே. ராமசாமி, உள்ளிட்ட எழுவர். செயலாளர்கள் கலியாணசுந்தரனர், டாக்டர் வரதராஜுலு முதலான ஐவர். இச்சங்கம் முதலில் ஜஸ்டிஸ் கட்சியினரால் பல இடங்களில் பல இடையூறுகளுக்கு உள்ளாயிற்று; ஆயினும் முடிவில் மக்களிடம் பேராதரவுபெற்றது. சங்கக் கொள்கைகளை டாக்டர் வரதராஜுலு தென்னுடெங்கும் பிரசாரம் செய்தார். திரு.வி.க. தம் தேசபக்தன் மூலம் காங்கிரஸுக்குப் பேராதரவு தேடினர்.

சென்னை மாகாணச் சங்கம் தோன்றிய சில நாட்களுக்குள் அன்னி பெசண்ட் அம்மையாரும் மற்றவர்களும் விடுதலையாயினர். திரு. வி. க. தம் சொற்பொழிவுகளாலும், தேசபக்தன் மூலம் எழுதிய கட்டுரைகளாலும் சென்னை மாகாணச் சங்கத்தை அரசாங்கம் மதிக்குமாறு வலிவுடையதாகச் செய்தார்.

தமிழிற் பேசும் கிளர்ச்சி

சென்னை மாகாணச் சங்கச் சார்பில், தஞ்சையும் திருச்சியும் கலந்து கூட்டிய மாநாடு இந்திய தேசாபிமானி (Indian Patriot) இதழ் ஆசிரியர் திவான்பகதூர் கருணாகரன் என்பவர் தலைமையில் 20, 21-4-1918 ஆகிய நாட்களில் நிகழ்ந்தது. இம்மாநாடு தமிழக வரலாற்றில் முதன்மை வாய்ந்தது. சுந்தரனார், "இனி எல்லோரும் பொதுக்கூட்டங்களில் தாய்மொழியாகிய தமிழிலேயே பேசல்வேண்டும். அயல் மொழியில் பேசும் தமிழர்களைப் பொதுமக்கள் திருத்தல் வேண்டும்" என்னும் கருத்தை வலியுறுத்திப் பேசி ஒரு தீர்மானம் நிறைவேற்றி வைத்தார்; தேசபக்தனிலும் நாடோறும் பல கட்டுரைகள் தீட்டினார்.

'தமிழில் பேசுவது தகுதியாகாது' என்ற தவறான கருத்துடன், ஆங்கிலத்திலேயே தம் அரிய நாவன்மையைக் காட்டிவந்த தமிழ் அறிந்த தலைவர்கள் யாவரும் அதுமுதல் தமிழிலேயே பேசத் தொடங்கினர். தமிழகக் காங்கிரஸ் செயற்குழுவின் நடவடிக்கையும் அதுமுதல் தமிழில் நடைபெற்றது. இன்று தமிழகத்தில் தலைசிறந்த தமிழ்ச் சொற்பொழிவாளர்கள் பலருளர். இவர்களெல்லாம் திரு. வி. க. வின் கிளர்ச்சியின் பயனால் புகழ் பெற்றவர்களே. இவ்வாறு திரு. வி. க. தம் வாழ்வில் முதன் முதலாக மொழிப் புரட்சி செய்ததனால், அந்நாளில் இவரை, "புரட்சி வீரர்" என்று மக்கள் புகழலாயினர். இக் கிளர்ச்சியின் வளர்ச்சியே, இன்று "சட்டசபைகளிலும் நீதிமன்றங்களிலும், அரசாங்க அலுவலகங்களிலும் எல்லா நிகழ்ச்சிகளும் தமிழ் மொழியிலேயே நிகழவேண்டும்" என்ற கிளர்ச்சியாக வளர்ந்துள்ளது என்பது ஈண்டுக் கருதற்பாலதாம்.

ஈரோட்டு மாநாடு

சென்னை மாகாணச் சங்கத்தின் இரண்டாவது மாநாடு, ஈரோட்டில் திரு. லார்ட் கோவிந்த தாஸ் தலைமையில் 1919-இல் நடைபெற்றது. இங்குத்தான், திரு. ஈ. வே. இராமசாமி அவர்களின் நட்பு திரு வி. க. விற்கு ஏற்பட்டது. திரு. வி. க. வும், ஈ. வே. ராவும் அரசியலுலகில் நேர் எதிரிகளாக இருந்தும், இருவரிடையே ஏற்பட்ட நட்பு திரு.வி.க. இறக்கும் வரையும் மாறாமல் நெஞ்சத்து அகம் நக நட்ட நட்பாய் வளர்ந்துள்ளதை நாம் கருதவேண்டும். கேவலம் கட்சி வேறுபாட்டா லும் கொள்கை மாறுபாட்டாலும் தம் நட்பைச் சிதைக்க விடாமல் பார்த்துக் கொள்ளுதல் ஒவ்வொரு வர்க்கும் உரிய கடனாம். அன்னார் திரு. வி. க., ஈ வே.ரா. நட்பைத் தம் நெஞ்சில் இருத்துவாராக.

நிற்க, இந்த ஈரோடு மாநாட்டில், 'அரசப் பிரதி நிதியாயிருந்த செம்ஸ்போர்ட் பிரபுவைத் திரும்ப அழைத் துக் கொள்ளல் வேண்டும்' என்ற தீர்மானத்தைத் திரு. வி. க. கொண்டுவந்து, நிறைவேற்றினார். செம்ஸ் போர்ட் பிரபு செய்த தீயசெயல்கள் பலவற்றை நிரலே எடுத்துக்காட்டி, நெஞ்சிலுரத்துடனும்நேர்மைத்திறத் துடனும் அம்மாநாட்டில் நம் சுந்தரனார் நிகழ்த்திய நிக ரற்ற சொற்பொழிவைக் கேட்ட தேசபக்தர் வ.உ.சிதம் பரனார் திரு.வி. க. வை நோக்கி, "இப்பேச்சு உமக்குத் தொல்லை விளைக்கும்" என்று கூறி எச்சரிக்கை செய் தார். சிதம்பரனாரின் சொற்களைச் செவிமடுத்த சுந்தர னார், "எத்தகைய இடையூறு வரினும் அஞ்சேன்" என்று கூறிச் செயலாற்றினார். இதனால் திரு. வி. க. வின் இளமைப் பருவத்திலிருந்த அஞ்சாமை, எவ்வளவு உரம் பெற்றிருந்தது என்பதை எண்ணிப் பாருங்கள்.

### வில்லிங்டன் பிரபு எச்சரிக்கை

சென்னை கவர்னராயிருந்த பென்ட்லண்ட் பிரபுக்குப் பிறகு வில்லிங்டன் பிரபு சென்னை கவர்னராக வந்தார். 1918-இல் ஒருநாள், வில்லிங்டன் தேசீய பத்திரிகாசிரியர்கள் பலரை வரவழைத்து எச்சரிக்கை செய்தார். நியூ இந்தியா இதழ் ஆசிரியர் திரு. அருண்டேலையும் சுதேசமித்திரன் ஆயசிரியர் திரு. அரங்கசாமியினையும் சாதாரணமாக அச்சுறுத்திப் பேசிய வில்லிங்டன் தேசபக்தன் இதழாசிரியரான நம் திரு. வி க. வைப் பார்த்து, "உங்கள் எழுத்தில் கொதிப்பு அதிகம்; அரசப் பிரதிநிதி செம்ஸ்போர்ட் பிரபுவை அளவு கடந்து தாக்குவது நல்லது அன்று" என்று கடுமையாக அச்சுறுத்தி எச்சரித்து அனுப்பினர். இந்நிகழ்ச்சியால் வெள்ளையதிகாரிகள் செய்த கொடிய செயல்களைத் திரு. வி. க. எவ்வளவு வீரமாய் எதிர்த்திருப்பார் என்பதை நன்கு உணரலாம்.

### தேசபக்தன் தொண்டு

அதே ஆண்டில் 'பஞ்சாப் படுகொலை' என்ற பயங்கர அட்டூழியம் பஞ்சாபில் ஜெனரல் டையர் என்பவரால் நடத்தப்பட்டது. இரக்கமற்ற இவ்வரக்கச் செயல், இந்தியத் தலைவர்கள் பலரது சிந்தையை அரித்தது. திரு. வி. க. வும் இக் கொலைச் செய்திகளை மிகுந்த கவலையுடன் தம் பத்திரிகையில் வெளியிட்டு, ஆங்கில ஆட்சியின் தீங்கினைத் தெள்ளத் தெளியப் படிப்பவர் உள்ளங் கவருமாறு எழுதுவார். சில சமயம் இக் கொலை நிகழ்ச்சிகளை யறிந்து, இவர் நெஞ்சு கரைந்து, கட்டுரையும் எழுத மனமெழாது. ஆசிரியர் தலையங்கம் இன்றியே ஒருநாள் தேசபக்தன் வெளிவந்ததும்

உண்டு. கொடுமையைக் கண்டு கொதிக்கும் நெஞ்சம் குழைந்துருகி இந்தியத் தாயின் அடிமைத் தளையை அகற்ற உழைத்து வரும் நிலைமையில், வீரவிளக்கு வ. வே. சுப்பிரமணியனாரும், கவியரசர் பாரதியாரும், புரட்சிக்காரர்க்கும் தேசபக்தர்க்கும் புகலிடமாய் விளங்கிய புதுச்சேரியில் அடைபட்டுக்கிடந்தனர். ஆங்கில அடக்கு முறை ஆட்சியின் கொடுமையால் அவர்கள் தமிழகத்தில் தலை நிமிர்ந்து உரிமையுடன் உலவ முடியாமல் இருந்தனர். இவ்விருவரும் பிரிட்டிஷ் எல்லையில் உலவும் உரிமையுடையராய் இருத்தல் வேண்டும் என்னும் கிளர்ச்சியைத் திரு.வி.க. தம் தேசபக்தன் இதழ் மூலம் தீவிரமாக நடத்தினர். கிளர்ச்சி வென்றது. பாரதியாரும் வ. வே. சு. வும் புதுவை எல்லையினின்றும் தமிழகத்தில் அச்சமின்றி உலவும் உரிமையைப் பெற்றனர். ஆனால் மீண்டும் பாரதியாரைச் சிறைக்கூட்டில் அடைக்கக் கூடலூரில் முயற்சி நடந்ததை அறிந்த திரு. வி. க. தேசபக்தன் வாயிலாக ஆங்கில ஆட்சியை நோக்கிய வாறு கண்டனக் கணையை வீசினர். அரசினர் வஞ்சகம் அஞ்சி யகன்றது. பாரதியார் சென்னைக்கு வந்து திரு. வி. க. வை 'டிராம்வே' தொழிலாளர் சங்கத்தில் சந்தித்தார். அப்போதுதான் பாரதியார் சக்திப்பாட்டைப் பாடினர். திரு. வ. வே. சு., கடித மூலம் திரு. வி. க. மேற்கொண்ட உலையா முயற்சியை ஊக்கி வாழ்த்தினர். சுந்தரனர் இவ்வாறு வெள்ளையராட்சியால்தேசபக்தர்கட்கு வந்த தொல்லைகளைப் பலமுறை தம் எழுத்தின் வலிமையாலும் பேச்சின் வலிமையாலும் களைந்துள்ளார். அதனல்தேசத் தலைவர்கள் யாவரும் சுந்தரனரிடம் பெருமதிப்புக் கொண்டிருந்தனர்.

# 8. இந்தியக் காங்கிரஸும் சுந்தரனாரும்

“மீன்கடலே எழுந்தாலும், விண்சுடரே விழுந்தாலும்
மான்மலைகள் சாய்ந்தாலும், மண்கம்ப மானாலும்,
ஊன்கொந்திக் கண்டதுண்டம் ஒன்னலர்கள் செய்தாலும்,
வான்மருவ நேர்ந்தாலும், மறப்பதன்று சுதந்திரமே”

— திரு. வி. க. (நாட்டுப் பாடல்)

“சுதந்திரம் மறப்பதன்று” என்று விளக்கம் கூறும் சுந்தரனார் சுதந்திரத்தை நாடி உழைக்கத் தோன்றிய அன்னிபெசன்ட் அம்மையார் அரும்பாடு பட்டு நடத்திய சுயாட்சிக் கிளர்ச்சியிலும் அக்கிளர்ச்சிக்குத் தடையாயிருந்த ஜஸ்டிஸ் கட்சியை அடக்குவதற்கென்றே தோற்றுவிக்கப்பட்ட சென்னை மாகாணச் சங்கத்திலும் சேர்ந்து உழைத்ததில் சிறிதும் வியப்பில்லை. இளமையிலேயே திரு. வி. க. நெஞ்சில் காங்கிரஸ் பற்று ஊன்றியது. ஜஸ்டிஸ் கட்சியை நேரடியாகத் தாக்கிப் பேசிய கூட்டம் ஒன்றில் 1917-ஆம் ஆண்டில் திரு. வி. க. தம் கன்னிப் பேச்சாகத் “திராவிடரும் காங்கிரஸும்” என்ற தலைப்பில் சொற்பொழிவாற்றினார். அன்று முதல் சுந்தரனார் யாருக்கும் அஞ்சாதவராய் வெளிப்படையாய்க் காங்கிரஸில் தொண்டாற்றி வரலானார்.

### வகுப்புவாதத்தில் வெறுப்பு

இவ்வாறு காங்கிரஸ் தொண்டராய், ஜஸ்டிஸ் கட்சிக்கு எதிரியாய், திரு. வி. க. உழைத்துவந்தாலும்,

ஜஸ்டிஸ் கட்சியின் பெருந்தலைவர்களாய் விளங்கிய திரு. ஸர். பி. தியாகராயர், பனகல் அரசர் முதலியவர்களிடம் தி. வி. க. கெடாவழி வந்த கேண்மை விடாமல் இறுதிவரை கொண்டு ஒழுகினார். அத்தலைவர்களுள் சிலர் திரு. வி. க. வைப் பார்க்கும்போது அவர்தம் அரிய உழைப்பு பிறருக்குப் பயன்படுகிறதே என்று ஏங்கி, ஏன் தம் கட்சியில் உழைக்கலாகாது என்று கேட்பதுண்டு. அக்கேள்விக்குத் திரு. வி. க. தரும் விடை நாமனைவரும் கருதத் தக்கது. "காங்கிரஸ் ஜாதி மதம் கடந்தது; இந்தியாவின் விடுதலையை நாடுவது. அத்தகைய ஒன்றை ஒரு கூட்டத்தார் அமைப்பாகக் கருதுவது தவறு. வகுப்புவாதத்தைக் காங்கிரஸ் ஏற்கும் நிலை நேர்ந்தாலும் யான் காங்கிரஸுடன் பிணங்கியே நிற்பேன்" என அவர் கூறுவதுண்டு.

### அன்னி பெசன்டின் பிரதிநிதி

1914-ஆம் ஆண்டு முதல் 1918-ஆம் ஆண்டு வரை ஐரோப்பாவில் முதல் உலகப்பெரும்போர் நடைபெற்றது. அக்காலத்தில் இந்தியாவிலும் அரசியல் உரிமைப் போரை அன்னி பெசன்ட் தலைமை தாங்கி நடத்தினார். பாலகங்காதர திலகர் போன்ற சீலமிக்க பெருந்தலைவர்களும் இப்போரில் முழுப்பங்கு கொண்டனர். அதன் பயனாய் அவர்கள் சிறையுற்றனர். தலைவர்கள் பலரும், காந்தியடிகளும், மகம்மதலி ஜின்னா அவர்களும் இவ்வியக்கத்துக்குப் பேராதரவு நல்கினர். இந்தியர் அனைவரும் சிந்தை ஒன்றாயினர்.

> "செப்பும்மொழி பதினெட்டுடையாள்—எனில்
> சிந்தனை ஒன்றுடையாள்."

இவ்வாறு பாரததேவியைப் பாரதியாரும் புகழ்ந்து பாடினர். அந்நாளில் நாடெங்கும் அவ்வளவு ஒற்றுமை நிலவியது.

இப்போர் அலுவலாய் அன்னிபெசன்ட் அம்மையார் சென்னையைவிட்டு வெளியே சென்றிருந்த போதெல்லாம், சென்னையிலே நம் திரு. வி. க. அன்னி பெசன்டாக மாறி உன்னுதற்கும் ஆக்குதற்கும் அரிய தொண்டுகள் பலவற்றைச் செய்து வந்தார்.

### ரௌலட் சட்ட எதிர்ப்பு

திலகர் பெருமான் இங்கிலாந்திற்கு ஒரு வழக்கின் காரணமாகச் சென்றிருந்தபோது, இந்திய சட்டசபையில் ரௌலட் மசோதா உருவாகிச் சட்டமாய்விடும் நிலையை எட்டியிருந்தது. நாட்டில் எங்கோ ஒரு மூலையில் எப்போதோ நிகழும் கலவரத்தைக் காரணம் காட்டி, விசாரணை இன்றி மக்களைத் தண்டிக்க அரசினருக்கு இம்மசோதா உரிமையளிப்பதாயிருந்தது. சிறு கூட்டத்தின் பொருட்டு மனித உரிமையையே பறிக்கும் கொடுங்கோலாட்சிக்கு இம்மசோதா சாமரம் வீசியது. ஆப்பிரிக்காவிலே மக்கள் உரிமைக்காக அரும்பாடு பட்டு அனுபவம் வாய்ந்த காந்தியடிகள் சும்மா இருப்பாரா? பொங்கியது ஆத்மசக்தி; எழுந்தார் காந்தியடிகள்; "மசோதா சட்டமாதல் கூடாது" என்று அந்நாள் அரசப் பிரதிநிதியாயிருந்த செம்ஸ் போர்ட் பிரபுவுக்கு விண்ணப்பம் விடுத்தார். தம்வேண்டுகோளுக்குச் செம்ஸ்போர்ட் செவி சாய்க்காமையைக் கண்ட காந்தியடிகள், சத்தியாக்கிரகம் தொடங்கும் கருத்துடன் இந்தியா முழுமையும் சுற்றுப் பயணம் செய்து மக்கள் ஆதரவைப் பெருக்கிக்கொண்டார்.

காந்தியடிகள் சந்திப்பு

சென்னை காந்தியடிகளை வரவேற்றது. காந்தியடிகள் வரும் வழியில் திரு. வி. க. அரக்கோணம் புகைவண்டி நிலையத்திற்குச் சென்று அடிகளை நேரில் சந்தித்தார்; காங்கிரஸ் தலைவர்களுள் ஒருவரான சேலம் விஜயராகவனார் அளித்த முடங்கல் ஒன்றைக் காந்தியடிகளிடம் சமர்ப்பித்தார். கடிதத்தைப் படித்தபின் காந்தியார், திரு. வி. க. வின் தேசபக்தன் இதழைப் பற்றியும், தமிழ்மொழியைப்பற்றியும், அவர் தம் கல்வி நிலை பற்றியும் பல கேள்விகள் கேட்டுத் திரு. வி. க. விடமிருந்தே அவர் தம் நிலையையும் சிறப்பையும் தெளிவாய் அறிந்துகொண்டார். காந்தியடிகள் திரு. வி. க. வை நோக்கி, "என் பேச்சை மொழிபெயர்ப்பீரா?" என்று கேட்க, திரு. வி. க. வும் அதற்குத் தம் இசைவை அளித்தார். அன்று முதல் திரு. வி. க. வைக் காந்தியடிகள், "மொழிபெயர்ப்பாளர்" (Translator) என்றுதான் அழைப்பது வழக்கம். மீண்டும் 1919-லும் 1927-லும் சந்தித்த நாளிலும் அவ்வாறே அழைத்தார் எனின் சுந்தரனாரின் மொழிபெயர்ப்பு ஆற்றலைப்பற்றிக் கூற வேண்டுமோ?

காந்தியடிகளின் கருத்துப்படி ரௌலட் சட்டத்தைக் கண்டிக்க எதிர்ப்புக் கூட்டங்களும் சத்தியாக்கிரக சபைகளும் இந்தியாவெங்கணும் ஏற்படுத்தப்பட்டன. அம்முறையில் சென்னையிலும் ஏற்பாடுகள் நடைபெற்றன. அவைகள் யாவற்றிலும் திரு. வி. க. விற்கும் பங்குண்டு. ரௌலட் மசோதா, ஏதேச்சாதிகாரமாய்ச் சட்டமாக்கப்பட்டுவிட்ட செய்தியைக் காந்தியடிகள் அறிந்தார். 1919-ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் ஆறும் நாள் ஞாயிற்றுக்கிழமையை அறப்போர் தொடங்கும்

நாளாகக் குறித்து அடிகள் ஓர் அறிக்கை விடுத்தார். கிளர்ச்சி வலுத்தது. செம்ஸ் போர்டு துரை மனங் கலங்குமாறு எதிர்ப்பு வெள்ளம் எங்கும் கொந் தளித்துக்கொண்டிருந்தது. துள்ளி எழுந்தனர் இந்தி யர் அனைவரும். சென்னையும் எழுச்சிகொண்டது. இத் திட்டம் வெற்றிபெறச் சென்னையில் திரு. வி. க. இரவு பகல் ஓயாது, சலிப்போ சோர்வோ தோன்றாமல் உழைத்தார்; திரு. வ. உ. சி., இராஜாஜி, தண்டபாணி, சுப்பராய காமத், பாரதியார் போன்றவர்களுடன் கூடி ஊர்வலம், பொதுக்கூட்டம், பஜனை முதலியன நடத்தி னார். சென்னை பாலசுப்ரமண்ய பக்தஜன சபை பஜனை கோஷ்டியில் கவியரசர் பாரதியார் 'முருகா, முருகா' என்ற பாடலைப் புதிதாகப் பாடிச் சத்தியாக்கிரகி களுக்கு ஆன்ம உணர்வை ஊட்டினார். 'சத்தியாக்கிரகி' என்ற இதழையும் அரசாங்கப் பதிவு இன்றித்தேசாபி மானிகள் சிலர் வெளியிட்டனர்.

### பஞ்சாப் படுகொலை

தென்னாட்டில் சத்தியாக்கிரகப்போர் அமைதியாக அன்பு நெறியில் சிறப்புடன் நடைபெற்றது. ஆனால் வடநாடோ உணர்ச்சிப் பெருக்கினால் வெறிச் செயலி லும் ஈடுபட்டுவிட்டது. பஞ்சாப் மாகாணம் வெறிச் செயலில் முன்னின்றது. நிற்கவே, அதனையடக்க அம் மாகாண கவர்னர், ஜெனரல் டையர், பாஞ்சாலத் தலை வர்கள் பலரை நாடுகடத்தி, ராணுவச் சட்டமும் பிறப் பித்தான்; மேலும், தேசபக்தர்களைத் தரையில் ஊர்ந்து செல்லுமாறு கட்டளை பிறப்பித்தான். சகோதரிகள் மானபங்கம் செய்யப்பட்டனர். ஜாலியன் வாலாபாக் என்ற இடத்தில் நிகழ்ந்த கண்டனக் கூட்டத்திலிருந்த

பாரதமக்களைத் தப்பி ஓடவும் இடமில்லாதபடி அப்படியே வளைத்துத் துப்பாக்கியின் தோட்டா தீரும்வரை சுட்டுச் சுட்டுப் பொசுக்கினான். இந்த அக்கிரமச் செயல் நாட்டிற்கு ஒரு பெரிய அதிர்ச்சியைக் கொடுத்தது. அகிம்ஸை தவறித் தொண்டர்கள் நடந்ததற்காக வருந்தி காந்தியடிகள் அறப்போரை நிறுத்தினார். பஞ்சாப் படுகொலையை நாடெங்கும் அமைதியான முறையில் கண்டிக்கக் கூட்டங்கள் நிகழ்ந்தன. சுந்தரனார் திரு. சுப்பிரமணிய சிவனாருடன் பலப்பல கூட்டங்களில் தம் வீரவுரைமூலம் மக்களுக்குப் பஞ்சாப் படுகொலை நிகழ்ச்சியையும், வெள்ளை ஆதிக்கத்தைக் கல்லி எறியவேண்டியதன் அவசியத்தையும், காந்தீயத் தத்துவத்தின் மேன்மையையும் தெள்ளத்தெளிய விளக்கிப் பேசி உணர்ச்சியூட்டினார்.

## திலகருடன் தொடர்பு

இந்நிலையில் திலகர் இங்கிலாந்திலிருந்து இந்தியாவிற்குத் திரும்பிச் சென்னைக்கு வந்தார். திரு. வி. க.வும் வ. உ. சிதம்பரனாரும் திலகரைப் பிரம்பூரில் சந்தித்தனர். திலகர் சென்னையில் மூன்றுநாள் தங்கினார். அம்மூன்று நாட்களும் திலகர் திருவடித்தாமரையில் திரு. வி. க. என்னும் தமிழ்வண்டு கட்டுண்டு கிடந்தது. அச்சமயம், அரசியல், தொழிலாளர் முதலிய பலதுறைகளிலும் திலகர் அவர்களின் தெளிந்த ஞானத்தேனைத் திரு. வி. க. உண்டு, களிகொண்டு, அவர்க்கு முதல் தொண்டரானார். திலகரையும் தம்மையும், பற்றித் திரு. வி. க. வே, "பசுவும் கன்றும் நாங்கள்" என்று மகிழ்வுடன் கூறிப் பெருமிதம் கொள்ளுகின்றாரெனில் சுந்தரனார் மேற்கொண்ட தேசபக்தியும் வீர வணக்க

மும் எத்துணைச் சிறப்புடையன என்பதை எண்ணுக. பெருந்தகை திலகர் 1920-இல் அமிர்தசரஸில் மறைந்தமை யறிந்து திரு. வி. க. மனமுடைந்து படுக்கையில் சிலநாள் நோயாய்க் கிடந்தார். 'அன்பின் வழியது உயிர்நிலை' என்பது மெய்யுரை யன்றோ?

## ஒத்துழையாமைப் போரில் ஒத்துழைப்பு

பஞ்சாப் படுகொலைக்கும் கிலாபத்து இயக்கக் கிளர்ச்சிக்கும் பிரிட்டிஷ் ஆட்சியில் நியாயம் பிறக்கவில்லை. ஆதலால் இவ்விரண்டையும் முன்னிறுத்திப் புதியதொரு போரைப் புதுமுறையில் தொடங்கலானார் காந்தியடிகள்; சத்தியாகிரகப் போரிடையே துராக்கிரகம் நிகழ்ந்ததால் மனம் வருந்தி அதை விடுத்து ஒத்துழையாமைப் போரைத் தொடங்கினார். அப்போரைத் தென்னாடெங்கணும் காட்டுத் தீயெனப் பரப்பிய பெருமை திரு. வி. க. விற்கே உண்டு என்றால் அது மிகைபடக் கூறலாகாது. இப்போரில் எவ்வளவு ஈடுபட வேண்டுமோ அவ்வளவும் ஈடுபட்டார் சுந்தரனார்.

## சுயராஜ்யக் கட்சித் தோற்றம்

காந்தியடிகள் சிறையிலிருந்த காலத்தில், விடுதலையடைந்து வெளிவந்த தேசபக்தருக்குள் சிற்சில கருத்து வேற்றுமைகள் தோன்றவே, காங்கிரஸ், தேசபந்து சித்தரஞ்சன தாஸ் தலைமையில் கூடி, மோதிலால் நேரு முதலியவர்களின் ஆதரவுடன், ஒத்துழையாமைப் போரில் சிற்சில மாற்றங்கள் செய்ய விரும்பியது. ஆனால் இராஜாஜி, ஈ. வே. ரா., திரு. வி. க. போன்ற தமிழ்த் தலைவர்கள் காந்தியடிகள் சிறையில் உள்ள போது, யாதொரு மாறுதலும் செய்தல் கூடாது என்று கூறினர். இதனால் மாறுதல் வேண்டுவோர், மாறுதல்

வேண்டாதார் என்று இரு பிரிவினராய்க் காங்கிரஸ் காரர் பிரிந்தனர். மாறுதல் வேண்டாதார் கட்சி தென்னாட்டில் நல்ல ஆதரவு பெறத் திரு. வி. க. செய்த அருந்தொண்டு மறக்கற்பாலதன்று. அந்நாளில் ஈ வே. ரா. வும், திரு. வி. க.வும் தமிழகம் எங்கும் சுற்றிச் சுற்றிப் பெருந் தொண்டு ஆற்றினர்.

### நகரசபைத் தேர்தலில் வெற்றி

வடநாட்டில் சுயராஜ்யக் கட்சி தேர்தலில் வெற்றி பெற்றுச் சட்டசபையிற் சென்று இரட்டை ஆட்சிக்கு முட்டுக்கட்டையிட்டு மத்திய சட்டசபையில் நிரம்பவும் செல்வாக்குப் பெற்றதைக் கண்ட திரு. எஸ். ஸ்ரீநிவாச அய்யங்கார், அக்கட்சிக்கு உழைக்கத் தலைப்பட்டார். நகரசபைத் தேர்தலில் பெருத்த அளவில் சுயராஜ்யக் கட்சி வெற்றிபெறத் திரு. வி. க. அக் கட்சித் தலைவர் திரு. எஸ். ஸ்ரீநிவாசனுடன் சேர்ந்து ஓயாதுழைத்தார். தமிழகத்தில் மிகப் பெரும்பான்மையான நகர சபைகள் எல்லாம் காங்கிரஸார் வசமாயின. இப் பெரும் வெற்றிக்குத் திரு. வி. க. வின் ஒப்பருஞ் சேவை செப்புந் தரத்தன்று; இம்முறையிலேயே, ஏன் இம் மாகாண சட்டசபைகளையும் கைப்பற்றலாகாது? என்று திரு. வி. க. போன்றோர் நினைத்து, அந் நினைவை நனவாக்க உணர்ச்சியுடன் உழைக்கலாயினர். இதன் பயனாக வேற்றுமையுற்றிருந்த தலைவர்கள் ஒன்றுபடவும் ஓர் அரிய வாய்ப்பு எற்பட்டது. 'காந்தி-தாஸ்-நேரு உடன்படிக்கை' என்பதே அது. இவ்வாறு தமிழகத்தில் காங்கிரஸ் சார்பில் நடத்தப்பெற்ற பல மாநாடுகளிலும் திரு. வி. க. கலந்துகொண்டு காந்தீயத்தையும், காங்கிரஸையும் பல வழியாலும் பரப்பப் பாடுபட்டார்.

காஞ்சி மாநாடு

காஞ்சீபுரத்தில் திரு. வி. க. தலைமையில் காங்கிரஸ் மகாநாடு கூடிற்று. அதில் இரண்டாம் நாள் கூட்டத்தில் பல தீர்மானங்கள் நிறைவேறின. அவற்றுள் ஒரு தீர்மானம் ஈ. வே. இராமசாமி, எஸ். இராமநாதன் ஆகிய இருவராலும் கொண்டுவரப்பட இருந்தது. தலைவர் திரு. வி. க. தலைவருக்குள்ள உரிமையைப் பயன்படுத்தி அதனை ஒழுங்கீனமானது என்று தள்ளி விட்டார். ஈ. வே. ரா. அச்செயலை எதிர்த்துப்பேசினார். தலைவர், "விஷயாலோசனைக் குழுவிலேயே (அஃதாவது மாநாட்டுக்குக்கொண்டுவரப்படுவதற்கு முன்பே) நீராகரிக்கப்பட்ட தீர்மானத்தை எப்படியும் மாநாட்டில் அனுமதிக்க முடியாது" என்று கண்டிப்பாகத் தம் நண்பர் என்றும் கருதாமல் மறுத்துவிட்டார். இம்மறுப்பு திரு. வி. க. விடம் ஈ. வே. ரா.க் குழுவினர்க்கு வெறுப்பேற்படுத்தியது. உடனே திரு. ஈ. வே. ரா., இராமநாதன், சுரேந்திரநாதர் போன்ற தலைவர்கள் மாநாட்டை விட்டு வெளியேறினர். அன்று முதல் திரு. ஈ. வே. இராமசாமி காங்கிரஸ் தொடர்பிலிருந்து விலகிக்கொண்டார்.

வஞ்சமறியாத நெஞ்சத்துடன் நவில்தொறும் நூல் நயம்போலப் பயில்தொறும் பண்புடையராய் வளர்ந்த இரு நண்பர்களையும் வேறுபடுத்திய அத்தீர்மானந்தான் என்னை? அத்தீர்மானம், "தேசீய முன்னேற்றத்திற்கு, இந்து சமூகத்தாருக்குள்ளும் ஜாதியாருக்குள்ளும் பரஸ்பர நம்பிக்கையும் துவேஷமின்மையும் ஏற்பட வேண்டுமாகையால் ராஜீய சபைகளிலும், பொது ஸ்தாபனங்களிலும், பிராமணர், பிராமணரல்லாதார்,

தீண்டாதார் எனக் கருதப்படுவோர் என்ற மூன்று பிரிவினர்களுக்கும் தனித்தனியாக ஜனத்தொகைக் கேற்றபடி தங்கள் தங்கள் சமூகத்திலிருந்து பிரதிநிதிகள் தேர்ந்தெடுத்துக்கொள்ளும் உரிமையைக் காங்கிரஸ் ஏற்படுத்த வேண்டும்" என்பதாகும்.

இத்தீர்மானத்தின் தொனி வகுப்புவாதத்தைக் கிளப்புவதாய் இருக்கின்றபடியாலும், இத் தீர்மானம் ஏற்கெனவே தோற்றுப் போயிருந்ததாலும், மீண்டும் மாநாட்டில் கொண்டுவருவது ஒழுங்குமுறை யன்ருதலாலும், வகுப்புவாதத்தை எந்த உருவிலும் வளரவிடக்கூடாது என்ற வைர நெஞ்சினரான திரு. வி. க. மாநாட்டில் இத்தீர்மானத்தை அனுமதிக்காதது அவர் தம் கொள்கைப்பற்றையும் நேர்மையையும் நன்கு விளக்கவில்லையா? அதனல் திரு. வி. க. வின் செயலை அந்நாள் பத்திரிகைகள் எல்லாம் நன்கு பாராட்டி எழுதின. ஆனல் ஈ. வே. ரா. வின் பத்திரிகையாகிய 'குடியரசு' மட்டும் சுந்தரனுரைத் தொடர்ந்து மறுத்து எழுதிவந்தது. இவ்வாறு எழுதிவந்த குடியரசின் ஆசிரியர் ஈ. வே. ரா. அவர்களிடம், திரு. வி. க. இறுதிக்காலம் வரையிலும் நட்பு மாருமலே பழகினர் என்பது கருதத் தக்கது.

> "அழிவந்த செயினும் அன்புஅருர்; அன்பின்
> வழிவந்த கேண்மை யவர்"

என்ற குறளுக்குத் திரு. வி. க. இலக்கியமா யிலகினர். இறுதியில் திரு. வி. க. நவசக்தியில் 'எனது நிலை' என்ற தலைப்பில், தம் உள்ளத்தைத் திறந்துகாட்டி, விளக்கவுரை ஒன்று எழுதிய பிறகே, குடியரசு அடங்கியது.

### கான்பூர் மாநாடு

ஒரு மாதத்துக்குப் பிறகு கவியரசி சரோஜினி தேவியார் தலைமையில் கான்பூரில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டில் சட்டசபைத் தேர்தலில் காங்கிரஸே நேரடியாகக் கலந்து போட்டியிட வேண்டும் என்ற தீர்மானம் நிறைவேறியது. இதே தீர்மானம் காஞ்சீபுர மாநாட்டில் தோற்றது.

கான்பூர் மாநாட்டின் முடிவு, காஞ்சி மாநாட்டிற்கு முன்னரே நிறைவேறி இருந்திருக்குமானால், ஈ. வே. ரா. வின் தீர்மானத்தைச் சுந்தரனார் நிராகரிக்காமல் இருந்திருப்பார். ஈ. வே. ரா. வும் காங்கிரஸை விட்டு விலகியிருக்கும்படியான ஒரு நிலை ஏற்பட்டிராது. "ஈ. வே. இராமசாமி ஒத்துழையாமை இயக்கத்தில் உள்ளும் புறமும் ஒன்றுபட உழைத்தவர். தமிழ் நாட்டில் கதரைப் பரப்பிய பெருமை அவருக்கே உண்டு. தீண்டாமைப் பேயை ஓட்ட அவர் பட்ட பாட்டை ஆண்டவனே அறிவான். அவர் வைக்கம் வீரராய் இலங்கியதை, நாடறியும். தென்னாட்டில் ஹிந்தி வகுப்பு ஒன்றை நடத்தி ஹிந்திக்கு வித்திட்டவர் ஈ. வே. ரா. வே. நாட்டு விடுதலையைக் குறிக்கொண்டு அவர் பலமுறை சிறை நண்ணியவர். அவர் பணியின் நேர்மையே அவர் நெஞ்சில் மாறுதல் நிகழ்த்தியது" எனத் திரு. வி. க. தம் வாழ்க்கைக் குறிப்பில் எழுதியுள்ளார்.

### ஜஸ்டிஸ் மலையைத் தகர்த்தல்

கான்பூர் காங்கிரஸ் முடிவு திரு. எஸ். ஸ்ரீநிவாசனாருக்கும் திரு. வி. க. விற்கும் புதிய ஊக்கம் பிறக்கச் செய்தது. சட்டசபைத்தேர்தல் பிரசாரத்தில்முழுமூச்சுடன்

திரு. வி. க. ஈடுபட்டார். பட்டிதொட்டிகளிலும், நாடு நகரங்களிலும், திரு. வி. க. வின் தீந்தமிழ் முழக்கம் எதிரொலித்தன. தேர்தலுக்குக் காங்கிரஸ் சார்பில் சிறந்த தொண்டர்களைத் திரு. வி. க. தேர்ந்துதவினார். ஆனால் தாம் மட்டும் எத்தொகுதிக்கும் நிற்கவில்லை. இவர் 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாரன்றோ?'

திரு. எஸ். சத்தியமூர்த்தி, ஆர். கே. சண்முகனார், எஸ். முத்தையா, ஏ. அரங்கசாமி, எஸ். ஸ்ரீநிவாசனார், திரு. வி. க. முதலியோர் காங்கிரஸ், சட்டசபைத் தேர்வில் வெற்றிபெற அரும்பாடு பட்டனர். செங்கற்பட்டு அந்நாளில் ஜஸ்டிஸ் கட்சியின் கோட்டையாகத் திகழ்ந்தது. அத்தொகுதிக்கு ஆற்காடு திரு. ஏ. இராமசாமி அவர்கள் அக்கட்சியின் சார்பில் நின்றார். 'ஜஸ்டிஸ் மலை' என்று அவரை யாவரும் அழைப்பதுண்டு. அவர் ஏற்கெனவே இருமுறை இத்தொகுதியில் வெற்றி பெற்றவர். செங்கற்பட்டு மாவட்டத்துக்கு உரிய தொகுதி இரண்டுக்கும் அவர் ஒருவரே நிறுத்தப்பட்டிருந்தார். அந்த ஜஸ்டிஸ் மலையை எப்படியும் தகர்க்கக் கங்கணம் கட்டிக்கொண்டார் திரு. வி. க. ஈரோட்டு இராமசாமி, ஆற்காட்டு இராமசாமியவர்கள் கட்சிக்குத் துணைவராய் பிரசாரம் செய்தார். இடையிடையே தம் குடியரசு மூலம் திரு. வி. க. வைத் தாக்கினார். தாக்கியும் என்? சுந்தரனாரின் கேட்டார்ப் பிணிக்குந் தகையவான பேச்சின் முன், பிறர் பேச்சு வெல்லுமா? முடிவில் செங்கற்பட்டில், காங்கிரஸே வென்றது. ஜஸ்டிஸ் கட்சியின் ஆணி வேரைக் கலகலக்கச் செய்தார் சுந்தரனார். அவர்தம் உலையா உழைப்பையும் உறுதியான உள்ளத்தையும் கண்ட தலைவர்கள் பலரும் அவரை மனமார வாயாரப் பாராட்டினார்கள்.

### உப்புச் சத்தியாக்கிரகம்

பின்னுளில், காங்கிரஸ் 1929-இல் மீண்டும் ஒத்துழையாமைப் போரில் ஈடுபட முடிவு செய்தது. 1930-இல் உப்புச் சத்தியாக்கிரகம் வீறிட்டெழுந்தது. காந்தியடிகள் தண்டி உப்புச் சத்தியாக்கிரகத்தைத் தொடங்கினுர். தமிழகத்தில் திரு. இராஜாஜியும் வேதாரண்யத்தினின்றும் உப்புக் காய்ச்சச் சத்தியாக்கிரகப் படையுடன் கிளம்பினுர். இப்போரிலும் திரு. வி. க. கலந்துழைத்துத் தொண்டாற்றினுர்.

### விலகல்

சட்டசபைத் தேர்தலில் காங்கிரஸ் பெரு வெற்றி பெறுமாஞல் சுயேச்சை கட்சியாளர்களுடைய உதவி கொண்டு மந்திரி சபையை அமைக்கக் காங்கிரஸ் தலைவர்கள் விரும்பினர். சட்டசபையிற் சென்று ஆட்சிக்கு முட்டுக்கட்டையிட்டு ஒத்துழையா இயக்கத்தை வளர்ப்பதற்கு மாருக, மந்திரிசபையை அமைத்து ஆட்சி நடத்த விரும்பிய செயல், திரு. வி. க. விற்கு அறமாகத் தோன்றவில்லை. உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசாத உத்தமராய திரு. வி. க. சிந்தித்தார். காங்கிரஸ் செயற்குழுவிலிருந்து விலகிவிட முடிவு செய்தார். பலர் தடுத்தும் கேளாமல், தம் முடிவுப்படியே விலகிக்கொண்டு வெறும் அங்கத்தினராயிருந்து வேறு பிற துறைகளில் உழைக்கலாஞர்.

### அரசியல் துறவு

அரசியற்றுறவு மேற்கொண்ட திரு. வி. க. வாளா இருக்கவில்லை. வடார்க்காடு மாவட்டக் கழகத் தேர்தலில் (District Board) சில ஊழல்கள் நேர்ந்தன. அவற்றை

எதிர்த்துத் திரு. வி. க. போராடினூர். காங்கிரஸில் சிலர் தங்கலப் போக்கினராயிருந்தனர். அங்நிலேயை வளர விடாமல் தடுக்கப் பழைய காங்கிரஸ் தொண்டர் ஒருவரைச் சுந்தரனூர் காவேரிப்பாக்கம் தேர்தலில் நிற்க வைத்து, உழைத்து வென்றூர். மாவட்டக் கழகத் தலைவர் (Dt. Bd. President) தேர்தலிலும் காங்கிரஸ் தவறிய பாதையில் சென்று, காங்கிரஸார் அல்லாதவராகிய அப்துல் ஹக்கீம் அவர்களை ஆதரித்ததைக் கண்ட திரு. வி. க. காங்கிரஸைத் தூய்மைப் படுத்த ஒரு புதிய அமைப்பைக் காண விரும்பினூர். தக்க துணைவர்களைக் கொண்டு ஏற்பாடுகளைத் தொடங்கச் சித்தமாயிருந்தார். அவ்வேளையில் கடற்கரைக் கூட்டம் ஒன்றில் திரு. இராஜாஜி பேசிய பேச்சொன்று திரு. வி. க. வின் கருத்தை ஆதரிப்பதாய் இருந்தது. அதைச் செயலளவில் கொண்டுவரவே தாம் பழைய அமைப்பிலிருந்தே முயல்வதால் புதிய அமைப்பு வேண்டாமென்று, திரு. வி. க. வை வேண்டிக்கொள்வதுபோல் அவர் சொற்பொழிவு அமைந்தது. அதனூல் சுந்தரனூர் புது முயற்சியைக் கைவிட்டு, சமயத்துறையிலும், தொழிலாளர் துறையிலும் தம் கருத்தைச் செலுத்தலானூர். பின்னர் சாதாரண காங்கிரஸ் உறுப்பினராகவும் இராமல் முற்றும் விலகிக் கொண்டார்.

சுந்தரனூர் காங்கிரஸ் அமைப்பிலிருந்து விலகிக் கொண்டாலும் பின்னுளில் வாய்ப்பு நேர்ந்துழியெல்லாம் காங்கிரஸுக்கே துணைபுரிந்தார். காந்தியமே தம் கொள்கையாகத் தம் இறுதிநாள் வரை வாழ்ந்தார். தலைவர்கள் சிலர் முக்குண வயத்தான் முறை பிறழ்ந்து செல்லும்போதெல்லாம் மேற்சென்று இடித்துத் தீது நீக்கி நன்றின்பால் செலுத்தினூர்.

# 9. தொழிலாளர் தந்தை

'ஏழைத் தொழிலாளர் இன்பமுடன் இவ்வுலகில்
வாழ வழிவகுத்த வல்லாளன்

— புலவர். க. வெள்ளைவாரணனுர்.

சுந்தரனுர் ஸ்பென்சர் கம்பெனியில் பணியாற்றி வந்தபோது தொழிலாளர் அவல நிலையை உணர்ந்து அவர்கள் நலங்கருதி உழைக்க விரும்பினுர். 1908-ஆம் ஆண்டில் மேனுட்டுத் தொழிற்கட்சித் தலைவருள் ஒருவ ராகிய கீர்கார்டி என்பவர் நம் நாட்டில் நடைபெற்ற சுதேச இயக்க நிகழ்ச்சிகளை நேரில் காண்பதற்காக இந்தியாவுக்குப் போந்து சென்னையில் தங்கி இருந்தார். அவர் சில சமயங்களில் ஸ்பென்சர் கம்பெனிக்கு வருவ துண்டு. அவர்தம் தோற்றமும் செய்தித் தாள்களில் அவரைப்பற்றி வெளிவந்த வரலாற்றுச் சுருக்கமும் சுந்தரனுரின் இளநெஞ்சைக் கவர்ந்தன. அக்கவர்ச்சி திரு. வி. க. வின் உள்ளத்தைத் தொழிலாளர்களைப் பற்றிய நூல்களில் தோய்வித்தது. மேனுட்டுத் தொழி லியக்கங்களைப்பற்றிய அறிவு, சுந்தரனுருக்கு ஒரு புத் துணர்ச்சியை ஊட்டியது.

சுந்தரனுர் வெஸ்லி கல்லூரியில் பேராசிரியராக இருந்தபோது, சென்னை சூளைப் பட்டாளத்திலுள்ள **'வேங்கடேசகுணுமிர்த வர்ஷணி'** என்னும் கழகத் தின் சார்பில் சொற்பொழிவாற்றச் சென்ற சமயங்களி லெல்லாம் பெரும்பாலும் தொழிலாளர்களே அவர்தம் சொற்பொழிவைக் கேட்கக் குழுமினர். சுந்தரனுரின்

சொல்லழகும் பொருளழகும் வாய்ந்த சொற்பெருக்கின் சுவையறிந்த தொழிலாளர்களும் கழகக் செயற்குழு வினரும், மீண்டும் மீண்டும் அவரை அங்கு அழைத்து வந்து பேசுமாறு செய்தனர். இந்நிகழ்ச்சியால் திரு. வி. க. தொழிலாளர்களுடன் நெருங்கிப் பழகும் நிலை யைப் பெற்றார். தொழிலாளர்களும் சுந்தரனாரை அடுத்து அடிக்கடித் தங்கள் வாழ்வியலைக் குறித்த செய்திகளைக் கூறித் தங்கள் குறைபாடுகளையும் அவர் பால் தெரிவித்து வந்தனர்.

நாட்டு நலிவையும் தொழிலாளர் அவல நிலையை யும் உணர்ந்த சுந்தரனார் தம் கல்லூரித் தமிழ்ப்பணியை விடுத்தார்; அரசியலில் தொண்டாற்ற முனைந்தார். அவர் 'தேசபக்தன்' ஆசிரியராகத் தொண்டாற்றிய போது உலகப் பெரும்போர் மூண்டிருந்ததனால் வெளி நாட்டுத் தொழிலாளர்களைப் பற்றிய பல செய்திகள் நாளிதழ்களில் வெளிவந்துகொண்டிருந்தன. அவற் றுள் ருஷ்யச் செய்திகள் சுந்தரனாரின் கருத்தைக் கவர்ந் தன. சென்னை மாகாண சங்கத் தலைவர் திவான்பகதூர் கேசவனார் 'இந்தியன் தேசாபிமானி' என்ற பத்திரிகை யில் தொழிலாளர்கள் பற்றி எழுதிய கட்டுரைகளும், திரு. ஜி. இராமாஞ்சலு, இலட்சுமணனார் போன்றார் களின் தொடர்பும், தொழிலாளர்களுக்கென ஒரு சங்கம் ஏற்படுத்த வேண்டும் என்னும் எண்ணத்தை வளர்த்தன.

### தொழிலாளர் சங்கத் தோற்றம்

1918-ஆம் ஆண்டில் தொழிலாளர் கூட்டமொன்று நடைபெற்றது. கூட்டத்தில் சுந்தரனார் மேனாட்டில் தொழிலாளர் இயக்கம் தோன்றி வளர்ந்த வரலாற்றை

யும் பொருளாதார விடுதலையின் மாண்பையும், தொழிலாளர் சங்கம் ஏற்படுத்த வேண்டியதன் இன்றியமையாமையையும் குறித்து உணர்ச்சி ததும்பப் பேசினார்.

அக் கூட்டம் நடைபெற்ற சில தினங்களுக்குப் பின்னர், திவான்பகதூர் கேசவனார் ஆலோசனையுடன் 1918-இல் இந்தியாவிலேயே முதன் முதலாகத் தொழிலாளர் சங்கமொன்று நிறுவப்பட்டது. திரு. வாடியா அச்சங்கத்தின் தலைவரானார். சுந்தரனார் துணைத்தலைவர்களுள் ஒருவரானார். அதுமுதல் சுந்தரனார் சங்கத்தின் வளர்ச்சி குறித்து எங்கும் சொற்பொழிவாற்றலானார்.

### தொழிலாளர் சங்க வளர்ச்சி

சென்னையில் தென்னிந்திய இருப்புப்பாதைத் தொழிலாளர் சங்கம், போலீஸ் சங்கம், எம். அண்டு. எஸ். எம். தொழிலாளர் சங்கம் என்னும் தொழிலாளர் சங்கங்கள் தோன்றலாயின. கோவையிலும், மதுரையிலும் நெசவுத் தொழிலாளர் சங்கங்களும் தோன்றின. தொழிலாளர் கிளர்ச்சி நாடெங்கும் பரவியது. பம்பாய், கல்கத்தா போன்ற நகரங்களிலும் தொழிற் சங்கங்கள் கிளைத்தன. முதலில் தொழிற் சங்கங்களுக்குப் பல எதிர்ப்புகளும் தோன்றின. அந்நாளில் புகழ்பெற்ற அரசியல் தலைவர்கள் பலரும் சுந்தரனாருடன் ஒன்றுபட்டுத் தொழிற்சங்கத்தை வளர்க்கலாயினர். சங்கம் நிறுவப்பட்டது முதல் அங்கங்கே கதவடைப்பும் வேலை நிறுத்தங்களும் நிகழ்ந்தன.

### மத்திய சங்கத் தோற்றம்

1919-இல் தொழிற்சங்கத் தலைவர் திரு. வாடியா அவர்கள் மேல்நாடு செல்ல நேர்ந்தபோது கவிக்குயில்,

சரோஜினி தேவியாரின் சகோதரியாருள் ஒருவராகிய திரு. மிருணாளினி சட்டோபாத்தியாயாவைத் தொழிலாளர் இயக்கத்தில் தொடர்புகொள்ளச் செய்துவிட்டுச் சென்றார். அவ்வம்மையார் தொழிலாளர்க்கு மத்திய சங்கமொன்று ஏற்படுத்த வேண்டியதன் இன்றியமையாமையைக் குறித்துப் பல கூட்டங்களில் வற்புறுத்திப் பேசினார். சுந்தரனாரும் அதுபற்றிப் பேசியும் எழுதியும் வந்தார்.

1920-ஆம் ஆண்டில் மாகாணத் தொழிலாளர் முதல் மாநாடு நடைபெற்றது. அதுபோது வரவேற்புரை நிகழ்த்திய சுந்தரனார், "தங்கத்தால் ஆகாததும் சங்கத்தால் ஆகும்; தொழிற்சங்கம் கட்டுக்குலைந்து போகாமல் இருத்தற்காக மத்திய சங்கமொன்று உடனே தேவை," என்று முழங்கினார். அதன் பயனாக அதே ஆண்டில் எந்த அரசியல் கட்சியின் தொடர்பும் இல்லாமல் மத்திய தொழிற்சங்கம் ஏற்படுத்தப்பட்டது. இம்மத்திய சங்கத்திற்குச் சுந்தரனாரையே யாவரும் ஒரே மனதாகத் தலைவராக்கினர். திரு. மிருணாளினி செயலாளராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். சுந்தரனார் சுமார் ஒன்றரையாண்டு சங்கத்தின் தலைவராகப் பணியாற்றினார்.

## தொழிலாளர் ஒற்றுமை உணர்ச்சி

ஒவ்வொரு ஞாயிற்றுக்கிழமையிலும் சென்னைக் கடற்கரையில் தொழிலாளர்கள் கூட்டம் நடைபெறும். அக்கூட்டத்திற்கு எல்லாச் சங்கங்களும் கொடிதாங்கி ஊர்வலமாய் வந்துசேர்வது கண்கொள்ளாக்காட்சியாயிருக்கும். தலைவர்களும், தொழிலாளர்களும் பேசுவார்கள். எந்தச் சங்கமாவது வேலைநிறுத்தம் செய்தா

லும், எந்தத் தொழிற்சாலையிலாவது கதவடைப்பு நிகழ்ந்தாலும், ஏனைச் சகோதர சங்கங்களும் அனுதாப வேலைநிறுத்தம் செய்தன. இதனால் தொழிலாளர் இயக்க வைரிகள் அஞ்சினர்.

கவர்னர் வில்லிங்டன் பிரபு சுந்தரனாரை இருமுறை அழைத்து நயமாகவும் பயமாகவும் எச்சரிக்கை செய்து அனுப்பினர். ஆனால், தொழிற்சங்கம் பிறைமதிபோல் வளர்ந்தது. கவர்னர் அதை மறைமுகமாக அழிக்க நினைத்தார். அவர் எண்ணம் தொழிலாளர் சட்டம் ஏற்படுத்தத் தூண்டியது. ஆனால், தொழிலாளர்கள் செய்த பெருங் கிளர்ச்சியினால் அச்சட்டம் நிறைவேற வில்லை. மேல்நாடு சென்றிருந்த வாடியா தாய்நாடு திரும்பினர். சங்கத்தின் தலைமைப் பதவியைச் சுந்தரனார் அவரிடம் ஒப்படைத்தார்.

ஒருசமயம் பக்கிங்காம் கர்னாடிக் மில்களில் ஏற்பட்ட ஒரு சிறு குழப்பம் காரணமாக மில் மூடப்பட்டது. தொழிலாளர் கிளர்ச்சி வலுத்தது. போலீசாரின் துப்பாக்கிப் பிரயோகமும் நடைபெற்றது. துப்பாக்கிக் குண்டுகளினால் இளைஞர்கள் இருவர் கொல்லப்பட்டனர்; பலர் காயமடைந்தனர். சுந்தரனாரும் வாடியாவும் தொழிலாளர்களைச் சமாதானம் செய்து மீண்டும் வேலைக்குத் திரும்பும்படி ஏவினர்.

திரு. வாடியா மீண்டும் வெளிநாடு செல்ல நேர்ந்தது. சுந்தரனாரே அம்முறையிலும் சென்னைத் தொழிலாளர் சங்கத் தலைமைப் பதவியை ஏற்றுக்கொண்டார். அப்போது இந்திய மந்திரியின் தூண்டுதலால் இந்திய அரசாங்கம் தொழிற்சங்கச் சட்டம் ஒன்றை நிறைவேற்றியது. அச் சட்டத்தினால் தொழிலாளர் ஓரளவிற்கு நன்மை எய்தினர்.

ஆறுமாதப் போராட்டம்

ஒருமுறை திரு. வி. க. சமயச் சொற்பொழிவாற்று தற்காகத் திருப்பாதிரிப்புலியூருக்குச் சென்றிருந்தார் அப்போது கர்னுடிக் மில்லில் சம்பளத் தகராறு காரண மாக இரு தொழிலாளர் வேலையினின்றும் நீக்கப்பட்ட னர். அதனுல் ஒரு பெரிய வேலை நிறுத்தம் உருவாகி யது. சுந்தரனுர் சென்னைக்குத் திரும்பி, சங்கத்தின் இசைவு இல்லாமல் திடீரென்று வேலை நிறுத்தம் செய் தது தவறு என்று விளக்கி, தொழிலாளர்களை மீண்டும் வேலைக்குச் செல்லுமாறு பணித்தார். வேலைநிறுத்தம் காரணமாகமில் அதிபர் எல்லாத் தொழிளார்களுடைய போனஸ் தொகையையும் பறிமுதல் செய்தார். சுந்தர னுர் அவ்வநீதியை எதிர்த்தார். தொழிலிலாக்கா அதி காரிகளுக்கும் அரசியலாருக்கும் முறையீடுகள் அனுப் பினுர். அவர்கள் மில்விஷயத்தில் தலையிட மறுத்தனர்.

> "துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
> இன்பம் பயக்கும் வினை"

என்னும் பொய்யாமொழியை எண்ணிச் சுந்தரனுர் வேலை நிறுத்தத்தைத் துணிவுடன் தொடர்ந்து நடத்தி னுர். அவர் தலைமையில் வேலைநிறுத்தம் ஆறுமாதம் தொடர்ந்துநடந்தது. பதின்மூன்ருயிரம்தொழிலாளர் களும் அவர் ஆணைப்படி ஆடினர். தொழிலாளர் போராட்டத்தை அடக்க விரும்பிய அதிகாரிகள் கைக் கூலிகள் சிலரை விட்டுவெறிச்செயலில் ஈடுபடச்செய் தனர். கருங்காலிகளின் கூட்டம் கரையிறந்து போய்க் கொண்டிருந்தது. இதனுல் தொழிலாளர்க்கும் கருங் காலிகட்கும் கலகம் மூண்டது. கத்திக்குத்துகளும், வெடிவீச்சுகளும், வீடுகளில் தீ வைப்பும் அளவிற்கு

மேல் நடைபெற்றன. தொழிற் சங்கத்தையும் மில்லையும் சுற்றிப் போலீஸ் காவலும் இராணுவக் காவலும் ஏற்பட்டன. இந்நாட்களில் திரு. வி. க. காலை மாலை வேளைகளில் தொழிலாளர்களுக்கு அன்பு நெறியைப் போதித்து வந்தார்.

### கவர்னருக்கு அஞ்சாமை

நிலைமை, கட்டுக்கடங்காமல் போவதை அறிந்த கவர்னர் வில்லிங்டன், திரு. வி. க. உள்ளிட்ட தலைவர் ஐவருக்குத் தம்மை வந்து காணும்படி உத்தரவிட்டார். அவர் விருப்பப்படி மறுநாள் ஐவரும் கவர்னர் மாளிகைக்குச் சென்றார்கள். வில்லிங்டன் அவர்களை நோக்கி, "சென்னையில் வேலைநிறுத்தம் காரணமாக வெட்டும், குத்தும், வெடிகளும், தீ வைத்தலும் நடைபெறுகின்றன. அவைகளுக்கு மூலகாரணம் நீங்கள் என்று அறிகிறேன். நாட்டின் அமைதியைக் காக்கும் பொறுப்பு அரசியலாருக்கு உண்டு" என்று கூறி அச்சுறுத்தினர். சுந்தரனர் தவிர ஏனையோர் ஏதேதோ சமாதானம் கூறினர்.

> "நாமார்க்கும் குடியல்லோம்; நமனையஞ்சோம்;
> நரகத்தில் இடர்ப்படோம்; நடலையல்லோம்;
> ஏமாப்போம்; பிணியறியோம்; பணிவோம் அல்லோம்"

என்னும் நாவரசர் தேவாரத்தை நாவாரப் பாடிப் பாடி உரமேறிய சிவநெறிச் செல்வரல்லவோ நம் திரு. வி. க. சுந்தரனர் வில்லிங்டனைப் பார்த்து, "எல்லோருக்கும் நியாயத் தீர்ப்புநாள் ஒன்றிருக்கிறது" என்று அஞ்சாது உரைத்தார். 'நியாயத் தீர்ப்புநாள்' என்னும் தொடர் கவர்னரை உறுத்தியதுபோலும். அவர், உங்களை எச்சரிக்கை செய்யவே அழைத்தேன். இனி

மேல் தீ வைத்தல் போன்ற தீய காரியங்கள் நடைபெறுமானல் நீங்கள் நாடுகடத்தப்படுவீர்கள்" என்று கூறி விடை கொடுத்தார்.

அன்றிரவு டாக்டர் நடேச முதலியார், திரு. வி. க. வை அவர் இல்லத்தில் சந்தித்து, "வில்லிங்டன் பிரபு உங்களை நாடு கடத்துவதற்காகவே நீலகிரியினின்றும் சென்னைக்கு வந்துள்ளார்; ஆனல் அதை அறிந்த சென்னை முதலமைச்சர் பனகல் அரசரும், சர். பி. தியாகராய செட்டியாரும் நாடுகடத்தலால் தம் கட்சிக்குச் தீங்கும் கெட்ட பெயரும் ஏற்படுமென்றும், உங்களை நாடுகடத்தினல் தாங்கள் பதவியிலிருந்து விலக நேரலாம் என்றும் கூறித் தடுத்தனர்," என்று சொல்லிச் சென்ருர். ஆனல், சுந்தரனரோ, "தியாகராயரும், பனகல் அரசரும் எனக்கு நன்மை செய்யவில்லை; தீமையே செய்தனர்," என்று அவரிடம் கூறினர். தம்மை நாடு கடத்தி இருப்பின் போராட்டம் இன்னும் அதிக வளர்ச்சி பெற்றிருக்குமே என்னும் கருத்தினலேயே அவர் அவ்வாறு கூறினர்.

தொழிலாளர் குழப்பம் நின்றபாடில்லை; சென்னை அரசாங்கம் கடுமையான நடவடிக்கையை மேற்கொண்டது. அப்போது நிகழ்ந்த துப்பாக்கிப் பிரயோகத்தினல் தொழிலாளர் எழுவர் இறந்தனர்; நூற்றுக்கணக்கானவர் காயமுற்றனர்; போலீஸார்களிலும் இருவர் உயிரிழந்தனர். அச்சமயத்தில் சர். தியாகராயர் தலையிட்டுத் தொழிலாளர் கூட்டம் ஒன்றைக் கூட்டினர்; அக்கூட்டத்தில் அரசியல் தந்திரம் மிகுந்த சொற்பொழிவு ஒன்றை ஆற்றினர். அதன் விளைவாகத் தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பினர். இங்ஙனம் வேலைநிறுத்தம் ஒரு முடிவுக்கு வந்தது.

1923-ஆம் ஆண்டில் நம் சுந்தரனார் தொழிற்சங்கத் தலைமைப் பதவியிலிருந்து விலகிக்கொண்டார். நடேச நாயகர் என்னும் அறிஞர் அப்பதவியை ஏற்றுப் பணியாற்றி வந்தார். அவருக்குப்பின் ஜி. எஸ். அருண்டேல், பி. சிவராவ் ஆகியோர் முறையே சங்கத் தலைவர்களாகத் தொண்டாற்றினர். 1935-ஆம் ஆண்டில் தொழிலாளர்களின் பெருவிருப்பத்திற்கு இணங்கிச் சுந்தரனார் மீண்டும் தொழிற்சங்கத் தலைவரானார். அவர் தலைமை ஏற்ற நான்காண்டுகளுக்குப் பிறகு சென்னைச் சூளை மில்லில் மற்றொரு வேலைநிறுத்தம் நடைபெற்றது. அதன்காரணமாக அதன் அதிபர்கள் அந்த மில்லையே மூடிவிட்டனர்.

1941-இல் இரண்டாம் உலகப் பெரும்போர் காரணமாகச் சென்னையில் மக்கள் வெளியேற்றம் நிகழ்ந்தது. பற்பல தொழிற்சாலைகளிலும் தொழிலாளர் வெளியேற்றத்துக்கென்று பொருளுதவி வழங்கப்பெற்றது. பக்கிங்காம் கர்னடிக் மில்லிலும் பொருளுதவி நல்க ஏற்பாடாயிற்று. அனல் அதற்காக விதிக்கப்பட்ட நிபந்தனைகள் தொழிலாளருக்கு வெறுப்பூட்டின. தொழிலாளர் சங்கம் நிபந்தனைகளைத் தளர்த்துமாறு கேட்டது. ஆனல் அதற்கு மில் அதிகாரிகள் இணங்கவில்லை.

அதிகாரிகளின் பிடிவாதமும் பிற நிகழ்ச்சியும் ஒன்றிச் சிறு குழப்பமாய்ப் பிறந்து, மில்லின் கதவடைப்பாய் வளர்ந்துவிட்டது. சுந்தரனார் தலையீட்டால் மறுநாள் காலையில் வழக்கம்போல் தொழிலாளர்கள் வேலைக்கு வந்தனர். ஆனல் நிபந்தனைகள் தளர்ந்தபாடில்லை. அதை எதிர்த்து மீண்டும் தொழிலாளர்கள் 1942-இல் வேலைநிறுத்தம் செய்தனர். உடனே ஆயுத

பாணிகளான போலீஸார் தருவிக்கப்பட்டனர். அப்போதும் தொழிலாளர்கள் மலை கலங்கினும் நிலை கலங்காத மனவுறுதியுடனிருந்தனர். வேலைநிறுத்தம் நிற்கவில்லை. கலகம் தலைகாட்டலானது. துப்பாக்கிப்பிரயோகம் செய்யப்பட்டது. எழுவரது ஆருயிர் எமனுலகு ஏகின. மில்லிற்கு வெளியில் கூடியிருந்த தொழிலாளர் மேலும் துப்பாக்கி ரவைகள் காற்றினும் கடுகிப் பறந்தன. கூற்றுவன் இருவர் உயிரை இமைநொடியுள் கவர்ந்து கொண்டேகினன். காயம்பட்டோர் எண்ணிலர். அவர்தம் காயமெல்லாம் செந்நீர் சிந்தின.

சங்கம் நோக்கிவந்த துங்கர் சுந்தரனார் வெளியில் நிகழ்ந்த துப்பாக்கிக் குண்டுமாரிக்கிடையில் சிக்கிக்கொண்டார். அவர் அருகிலேயே ஒரு தொழிலாளி அடிபட்டு மாண்டதைக் கண்டு மனம் பதறினார். போலீஸ் அதிகாரி ஒருவர் திரு. வி. க. வை, "நீங்கள் ஏன் இங்கே நிற்கிறீர்கள்?" என்று கேட்டார்.

> "நலிவினை நீக்கி நாட்டை நல்லற நெறியுய்க்காமல்
> எலியெனப் புலவரெல்லாம் இல்லத்தே இருக்கும் அந்நாள்
> புலியென அரசியற்போர் புரியமுன் வந்த வீரர்
> கலியாண சுந்தரப் பேர் கவின் திரு. வி. க. அன்றோ?"

அவர், "வீரர்க்கு உயிர் வெல்லமன்று? என் ஈர மனம் துப்பாக்கியை நாடுகிறது" என்று வீர மொழியை முழக்கினார். தலைவரைக் காப்பாற்றத் தொழிலாளர்கள் சிலர் திரு. வி. க. வை வற்புறுத்தி அவர் உள்ளத்திற்கு மாறாகவே களத்தினின்றும் வெளியே அழைத்துச் சென்றனர். நிலை கலங்காத நெஞ்சுரங்கொண்ட சுந்தரனார் தன்னலமற்ற சேவை தான் என்ன?

"..........புகழ் எனின் உயிரும் கொடுக்குவர்;
பழி எனின் உலகுடன் பெறினும் கொள்ளலர்
..............தமக்கென முயலா நோன்ருள்
பிறர்க்கென முயலுநர்"

என்று கடலுண் மாய்ந்த இளம்பெருவழுதி வளம் பெறப் பாடிய பாடலுக்குத் திரு.வி.க. இலக்கியமானுர் என்பதில் ஐயமில்லே. அஞ்சுதலும் கெஞ்சுதலும் அறியாத சுந்தரனுர் துப்பாக்கிப் பிரயோகம் குறித்து விசாரணை நடத்துமாறு வேண்டினுர். ஆனுல் அரசியலார் அதற்குச் சிறிதும் செவிசாய்த்திலர்.

இந்நிலேயில் 1943-ஆம் ஆண்டில் சென்னேத் தொழிலாளர் சங்கத்து வெள்ளி விழா நடைபெற்றது. அவ்விழாவின் முடிவில் திரு. வி. க. அவர்கள் தொழிலாளர்க்கு அருளிய மணிமொழிகள் அவர்கள் உள்ளத்திற்கு அணிமொழிகள் ஆயின. அவ்விழா நடந்து ஒரு திங்களுக்குப்பின் சுந்தரனுர் சங்கத்தினின்றும் விலகி, சன்மார்க்க சமய நெறியில் தொண்டாற்ற விரும்பி விலகல் கடிதம் கொடுத்தார். அவர்தம் தொடர்பை இழக்க விரும்பாத தொழிலாளர் அவரை வாழ்நாள் முழுவதும் சங்கத்தின் செயற்குழு உறுப்பினராக இருக்கச் செய்தனர். அதே ஆண்டில் திரு. வி. க. வின் மணி விழாவும் தமிழகம் எங்கும் தனிப்பெருஞ் சிறப்புடன் நிகழ்ந்தது. தொழிற்சங்கங்கள் தங்கள் தலேவரின் அரும்பெரும் மணி விழாவைத் தம்மாலானவரையிலும் அணிசெய்து செம்மையாய்க் கொண்டாடின.

1947-ஆம் ஆண்டில் பக்கிங்காம் கர்னுடிக் மில் தொழிலாளர்களின் பொருளாதார உயர்வுப் போராட்டம் நடைபெற்றது. அப்போராட்டத்தின் தலேவர் திரு. அந்தோணிப்பிள்ளே நாடுகடத்தப்பட்டார். அவ

ருக்குப் பிறகு சங்கம் சுந்தரனாரைப் போராட்டத் தலைவ ராகத் தேர்ந்தெடுத்தது. தள்ளாத வயதில் பிறர் எள் ளாத வழியில் தளராத உறுதியுடன் சுந்தரனார் தலைமை யேற்றார். சங்கம் அவருக்கு எல்லா உரிமைகளும் வழங் கிற்று. தொழிலாளர்களை ஒன்று சேர்த்து உணர்ச்சி யூட்டிக் கட்டுப்பாட்டை வளர்க்கவேண்டிய பொறுப்பு கலியாண சுந்தரனாரைச் சார்ந்தது. மிகவும் அமைதி யான முறையில் அவர் போராட்டத்தை நடத்திவந்தார். அரசியலார் அவரைச் சிறையில் வைக்கத் துணிய வில்லை. ஆனால் அவர் இல்லத்தைச் சுற்றிலும் போலீஸ் வீரர்களை நிறுத்தி அவர் வீட்டையே சிறைக்கூடமாக் கினர்.

தொழிலாளர் போராட்டம் நூற்று மூன்று நாட் கள் நடைபெற்றது. சுந்தரனார் அக்காலத்தில் அறுபது வயது நிரம்பிய வயோதிகரேயாயினும் இளைஞர்களும் நாணமுறும்படி எழுச்சியுடன் செயலாற்றினார். 1922-ஆம் ஆண்டில் முதலாளிகளால்ஏற்படுத்தப்பட்ட "வெல்-பேர்" (Welfare) என்னும் அமைப்பை ஒழிக் கும் வரையில் சுந்தரனார் தலைப்பாகை அணிவதில்லை என்று உறுதி பூண்டிருந்தார். அந்தோணிப் பிள்ளை அவர்கள் ஊக்கத்தாலும் உழைப்பாலும் அவ்வமைப்பு ஒழிக்கப்பட்டது. சுந்தரனார் மீண்டும் தலைப்பாகை அணியலானார். இவ்வாறு அல்லும் பகலும் தொழிலா ளர்கள் முன்னேற்றத்துக் குழைத்த அண்ணலைத் தொழி லாளர் தந்தை என்று கூறுவதில் வியப்பில்லையன்றோ?

---

## 10. தாளும் நூலும்

**தே**சபக்தியால் உந்தப்பட்ட சுந்தரனுர் தமிழாசிரியர் பதவியைத் தள்ளிவிட்டுத் தேசபக்தனுசிரியராவதைத் திரு. மறைமலையடிகள், பெ. இரத்தினவேலர். நமசிவாயர், சச்சிதானந்தம் போன்றவர்கள் தடுத்தனர் ஆனுல் அவர் தம் வழியே ஒழுக முனைந்து தேசபக்தன் ஆசிரியராக இரண்டரை ஆண்டுகள் புரிந்த அருந் தொண்டு சிறந்ததாகும். அந்நாளில் தேசபக்தனில், இன்று சிறந்த எழுத்தாளர்களாகப் போற்றப்படும் திரு. வெ. சாமிநாதர், சேஷாத்திரி, பரலி. சு. நெல்லையப்பர் முதலியவர்கள் துணையாசிரியர்களாய் அமர்ந்து தொண்டாற்றினர்.

தேசபக்தனே முதலில் பத்திரிகை உலகில் 'தமிழிலும் சிறந்த நடையில் பத்திரிகை நடத்த இயலும்' என்பதை வெளிப்படுத்தியதாகும். அது அதிகாரிகள் புரியும் அட்டூழியங்களைக் கண்டித்தது; மக்களின் நாட்டுப்பற்றை மிகுதியாக வளர்த்தது; தியாகிகள் வழிபாட்டைப் பெரிதும் ஆதரித்தது; தேசத்திற்கும் தேசபக்தர்களுக்கும் நிகழ்ந்த இன்னல்களை ஒழிக்க அரும்பாடு பட்டது; முத்தமிழின் பெருமையை எத்திசையும் போற்றுமாறு செய்தது; காந்தீயத்தைப் பரப்பியது; தொழிலாளர்க்குத் துணைவனு யுழைத்தது.

தேச பக்தனின் தீவிரமான போக்கைக் கண்ட அரசினர் ஈடுகாணம் (ஜாமீன் தொகை) செலுத்துமாறு வற்புறுத்தினர். தேசபக்தனை நடத்திய நிர்வாகிகள், திரு. வி. க. வின் தீவிர எழுத்து நடையே அதற்குக் காரணம் என்றறிந்து அரசினர் விரும்பியவாறு

நடையின் தீவிரத்தைத் தளர்த்தும்படியும், சில மறை முக ஏற்பாடுகளுக்கு இணங்குமாறும் வேண்டிக்கொண் டனர். சுந்தரனார் அதற்கு இணங்கி வாழ இசையாமல் தேசபக்தனை விட்டு விலகிக்கொண்டார்.

விலகிய சில நாட்கள் சமயப் பணியில் ஈடுபட் டிருந்த சுந்தரனாரைத் தேச பக்தர்களின் வாசகர்களும் தொழிலாளர்களும், தேசத் தலைவர்கள் சிலரும் வற் புறுத்திப் பணமுடிப்பும் கொடுத்து மீண்டும் பத்திரி கையைத் தொடங்குமாறு வேண்டிக் கொண்டனர். அதனால், சுந்தரனார் 'நவசக்தி' என்னும் இதழைத் தொடங்கித் தொடர்ந்து இருபதாண்டுகள் இனிது நடத்திவந்தார். அதில் திருவாளர்கள், வெ. சாமிநாத னார், வேங்கட கிருஷ்ணனார், கல்கி, சக்திதாஸ் சுப்பிர மணியம் முதலியோர் துணையாசிரியர்களாக அமர்ந்து இணையற்ற கட்டுரைகள் எழுதினர். நவசக்திக்குத் தமிழ் கூறு நல்லுலகத்திலும் தமிழர் சென்று வாழும் கடல்கடந்த நாடுகளிலுமிருந்து பேராதரவு கிடைத் தது. நவசக்தி பல ஆக்க வேலைகளைப் புரிந்து வந்தது; சமூக சீர்திருத்தம், பெண்ணலம், மொழிச் சிறப்பு, கலையாக்கம், தேசபக்தி, தொழிலாளர் நலம், சமதர்மம் முதலிய உயரிய குறிக்கோள்களைக் கொண்டு புதுமை யான கட்டுரைகளைத் தாங்கி வெளிவந்தது.

காந்தியடிகளின் தலைமையில் நிகழ்ந்த உப்புச் சத் யாக்கிரகப்போரில்,நவசக்தியும் கலந்துகொண்டதனால், அதற்கு ஈடுகாணம் கட்டுமாறு அரசினர் ஆணையிட் டனர். அதனைச் சுந்தரனார் விரும்பவில்லை. அதனால், ஆறு திங்கள்வரை நவசக்தியை நிறுத்திவிட்டார். மீண் டும் நவசக்தி திங்கள் வெளியீடாகவும் பிறகு வார வெளியீடாகவும் வெளிவரலானது. அந்நாட்களில்

சுந்தரனாரின் நாட்டம் சமயத்துறையில் நிரம்பவும் சென்றிருந்ததால், நவசக்தி சமயக் கட்டுரைகளையே மிகுதியாத் தாங்கி வெளிவரலானது.

1939-இல் ஏற்பட்ட இரண்டாவது உலகப் பெரும் போரின் பயனாக பிரஸ் அட்வைஸர் நியமனமும், விதவிதமான சட்டங்களும், காகிதக் கட்டுப்பாடும் ஏற்பட்டன. அதனால், சுந்தரனார் நவசக்தியைத் தக்கவர் ஒருவரிடம் ஒப்படைத்துவிட்டுச் சன்மார்க்க சங்கத் தொண்டு புரியத் தனிமையையும், அமைதியான சூழலையும் விரும்பினார். அவ்வமயம் அவர்தம் தமயனார் மகன் பாலசுப்பிரமணியத்தின் பிரிவும் அவருக்கு இவ்வெண்ணத்தை வளர்த்தது. எனவே, திரு. இராதாமணி அம்மையார் என்பவரிடம் அப்பத்திரிகை ஒப்படைக்கப்பட்டது. சுந்தரனார் தேசபக்தனில் எழுதிய சிறந்த கட்டுரைகளைத் திரட்டித் தேச பக்தாமிர்தம் என்றொரு நூலாக வெளியிட்டுள்ளார்.

சுந்தரனாரின் தமிழ்நடை 'பீடும் மிடுக்கும், எழுச்சியும் சிளர்ச்சியும், வீறும் வீரமும் மதர்த்து ஏக்கழுத்தம் பெற்ற' நடையாகும். அவர்தம் நூல்கள் படிப்பவர் உள்ளத்தை ஈர்க்கும் நல்விருந்தாகும். அவர் புலவர்களேயன்றி யாவரும் உணரும் இனிய எளிய நடையில் எழுதவல்லவர்; தாம் பேசுவது போலவே எழுதும் ஆற்றலுடையவர். அவர், தம் வாழ்நாளில் சமயம், மொழி, கலை, சீர்திருத்தம், அரசியல் இவற்றைக் குறித்து ஐம்பதிற்கு மேற்பட்ட நூல்களை இயற்றியுள்ளார். அவை ஒவ்வொன்றும் தமிழ் மக்களின் அரிய இலக்கியமாகவே விளங்குகின்றது.

சுந்தரனார், பிறர் தமக்குத் தினைத்துணை நன்றி செயினும் அதனைப் பனைத்துணையாகக் கருதும் பண்பி

னர் ஆவார். ஆதலின் தமிழில் தமக்கு ஆர்வமூட்டிய ஆசிரியர் யாழ்ப்பாணம் நா. கதிரைவேலர் வரலாற்றையே முதன் முதலில் நூலாக்கி வெளியிட்டார். பின்னர் சஞ்சிகை சஞ்சிகையாகப் பெரிய புராணக் குறிப்புரையும் வசனமும் வெளியிட்டார். பலர் வேண்டுகோளுக்கு இணங்கிப் பட்டினத்தார் பாடலுக்கு விரிவுரை இயற்றினார். இம் முயற்சியே பின்னாளில் திருக்குறளுக்கு அரிய பெரிய விரிவுரை எழுதும் ஆற்றலை அளித்தது.

இளமையிலிருந்தே நம் சுந்தரனார் பல்வேறு சமய அறிஞர்களுடன் கலந்து பழகும் வாய்ப்பினைப் பெற்றவர். அவ்வறிஞர்களின் தொடர்பு அவரைப் பற்பல சமயக் கொள்கைகளையும் ஆராய்ந்துணரும் தன்மையைப் பெறச் செய்தது. எல்லாச் சமயங்களிலும் மக்கள் வாழ்வைச் செம்மைப் படுத்தும் பொது நெறிகளே கூறப்படுவதை அறிந்த சுந்தரனார் அதனைத் தம் இனிய நூல்களின் வாயிலாக வெளிப்படுத்தினார்.

'எவ்வுயிரும் நீங்காது உறையும் இறை சிவன் என்று எவ்வுயிர்க்கும் அன்பாய் இரு' என்னும் கொள்கையைத் தெளிந்த சுந்தரனார் அத்தெளிவின் பயனாய்ச் சமரச சன்மார்க்கத் திறவுகோல் என்னும் நூலை வெளியிட்டார். சுந்தரனார் சைவ சமயத்தைச் சார்ந்தவராயினும் திருமால் நெறிவேறு சிவநெறி வேறு எனக் கருதாமல் வைணவ நூல்களாகிய திருவாய்மொழியிலும் திவ்வியப் பிரபந்தங்களிலும் மூழ்கித் திளைத்தார். அதன் பயனாய்த் திருமால் அருள்வேட்டல் என்னும் செய்யுள் நூலையும், தமிழ் நாடும் நம்மாழ்வாரும் என்னும் உரைநடை நூலையும் இயற்றினார்.

இவ்வாறே சுந்தரனார் ஜைன சமய சாத்திரங்களையும் கற்கத் தொடங்கினார். திரு. பார்சுநாதர், ஆ. சக்

கரவர்த்தி நயினார்போன்ற பேரறிஞர்களின் கூட்டுற வும் ஜைநா கெஜட்டும் சில ஆங்கில நூல்களும் அச்சம யத்தின் உண்மைகளை உள்ளங்கை நெல்லிக்கனி என விளக்கின. சுந்தரனார் மேற்கொண்ட நெடுநாளைய ஆராய்ச்சியின் பயனாய்ச் சைவமும் ஜைனமும் ஒன்றா கவே இருந்து இடைக்காலத்திலேயே இரண்டாகப் பிரிவுற்றிருத்தல் வேண்டும் என்னும் முடிவுக்கு வந் தார். இம் முடிவு அருகன் அருகே என்னும் நூலை ஆக்குவித்தது.

திரு. வி. க. பௌத்த மதத்தின் உண்மையும் சிவ தத்துவமாய் இலங்கக் கண்டார். மாகாபோதி சங்கத் தில் நிகழ்ந்த சொற்பொழிவுகளைக் கேட்டும், தம் வீட்டு மருத்துவர் அயோத்திதாசர்பால் அருங்கலச் செப்பு போன்று பௌத்த நூல்களின் சாரங்களை அறிந் தும் அச் சமய தத்துவங்களை உணர்ந்த சுந்தரனார். தாம் பெற்ற பேற்றைப் பெறுக இவ்வையகம் எனத் 'தமிழ் நூல்களில் பௌத்தம்' என்னும் நூலை மக்களுக் குத் தந்துதவினார்.

தமக்கு ஐந்தாம் படிவத்து ஆசிரியராய் இருந்த தெலுங்கர் கிருஷ்ணனார், தலைமை ஆசிரியர் ஜான் இரத்தினம் போன்ற அன்பர்கள் கூட்டுறவாலும், கிறிஸ்துவ சகோதர சங்கம், பெந்த கொஸ்தே சங்கம் முதலியவற்றின் தொடர்பாலும் கிறிஸ்து மத வேதமா கிய பைபிள் நூலாலும் அகத் தோற்றத்தால் உண் மைக் கிறிஸ்தவராகவே திரு. வி. க. விளங்கினார். கிறிஸ் தவர்கள் மேற்கொண்டொழுகும் 'முறையீடு-அழுகை-பாவ மன்னிப்பு' முதலியவற்றின் உண்மையும் மாணிக்கவாசகர் கூறிய உண்மையும் ஒன்றாய் இருக்கக் கண்டார். **கிறிஸ்துவின் அருள் வேட்டல், கிறிஸ்துவின்**

மொழிக்குறள் என்னும் நூல்கள் அவரது மலர்வாயி னின்றும் பிறந்தன.

இவ்வாறே சுந்தரனுர் வேதாந்த சித்தாந்த நூல்களையும் பாரசீயம், ஆரியசமாஜம், பிரமசமாஜம், போன்ற பலவேறு சமய நிலைகளையுமெல்லாம் வல்லார் வாய்க் கேட்டும் நல்லார் நூல் பயின்றும் நன்கு உணர்ந்தார். இவ்வுணர்வைப் பெறுவதற்காக அவர் தமிழ், ஆங்கிலம், கிரந்தம், பாலி, வடமொழி என்னும் பல மொழிகளிலும் அறிவு பெறலானுர். இவ்வாறு பல மதங்களின் உண்மை அறிந்ததனுல் சுந்தரனுர் சிறந்த சமரச சன்மார்க்கவாதியானுர். கீழ்வரும் பாடல் அவர் தம் சமரச ஞானத்தைப் பலப்படுத்துவதாகும்.

''புல்லாங் குழலில் இசைமுழக்கிப்
போதி நிழலில் தவங்கிடந்து
கல்லால் அடியில் பேசாது
கல்லாம் மலையில் மறை பேசி
எல்லார் மலரில் **சமரசசன்
மார்க்கம்** இசைத்தே உரிமையளி
செல்வா, சிறியர் பிழைபொறுக்கும்
தேவா, வாழி அருள்வாழி!

காந்தீயக் கொள்கையில் ஊறித் திளைத்ததின் பயனுய்த் திரு.வி.க. மனித வாழ்க்கையும் காந்தியடிகளும்என்னும் நூலை வெளியிட்டார். இந்நூல் ஒப்புயர்வற்றது. இதுவே தம் நூல்களுள் முதன் முதல் படிக்கத் தக்கது என்பதவர் கருத்து. இதற்கீடாகக் காந்தியத்தை விளக்கும் தமிழ்நூல் இன்று வரையிலும் தோன்றவில்லை எனின் அது மிகையன்று. திரு. வி. க. இயற்கையில் தோய்ந்துதோய்ந்து தாம் அடைந்த இன்ப அடைவை, 'முருகன் அல்லது அழகு' என்னும் நூலாக்கி வெளி

யிட்டார். அந்நூல் சொல்லழகும் பொருளழகும் தொடையழகும் நடையழகும் வாய்ந்து புலவர்க்கும் மாணவர்க்கும் நல்விருந்தாக விளங்குகிறது.

தொழிலாளர் தொடர்பால் சுந்தரனார் பெற்ற அனுபவங்களை, இந்தியாவும் விடுதலையும் என்னும் நூலில் விரிவாகக் காணலாம். அவர் இயற்றிய உள் ளொளியில் அவர்தம் உள்ளத்தில் முதிர்ந்த ஞான ஒளியை நாம் கண்டு மகிழலாம்.

சுந்தரனார், மேற்கொண்டுள்ள பலவகைத் தொண்டுகளால் பகலில் நூல் எழுதும் வாய்ப்பு கிடைக்கவில்லை. ஆதலின், அவர் எல்லோரும் இனி துறங்கும் இரவைப் பகலாக்கி உலையாதுழைத்தார். அதன் பயனாய் மலர்ந்த நூல்களே பலப்பலவாம். இவையே அவருக்கு அரசியல், தொழிலியல், சமூக இயலில் கிடைத்த புகழைவிட உயர்ந்த புகழைத் தேடித் தந்தனவாகும்.

ஜான் மில்டன் என்னும் ஆங்கிலக் கவிஞர் மிகுதி யாகக் கற்றதன் பயனாய்க் கண்ணொளி இழந்தார். இழந்த பின்னும் தாம் வாய்மூலம் பாடிவர, அவர்தம் மாணவர் அவற்றை எழுதி வெளியிட்டனர் என்று கேள்விப்படுகிறோம். ஆனால் அவ்வுண்மையை நாம் நேரில் காணவில்லை. எனினும் சுந்தரனார் மில்டனைப் போல் வாழ்ந்த வரலாற்றை நாம் அனைவரும் கண் கூடாகக் கண்டோம். அவர் இரவில் தூக்கம் அரிய தாய காலத்தில் தம் சிந்தனை சக்தி ஊற்றெனப் பெருகு வதை உணர்ந்து, அவற்றை நூலாகிய அணைகட்டித் தேக்க நினைத்தார். முகக்கண் இழப்பினும் அகக்கண் இழவாத சுந்தரனார், தம் முதுமைக்காலத்தில் இருளில் ஒளி என்னும் கவிதை நூலை இயற்றினார். உலகப்

பேரறிஞர் ஜார்ஜ் பெர்னட்ஷா வயது முதிர்ந்த காலத்திலும் அரிய பெரிய நூல்கள் இயற்றி வந்ததுபோல நம் சுந்தரனாரும் தமது தள்ளாமைப் பருவத்திலும் சித்தந் திருத்தல், முதுமை உளறல் என்னும் கவிதை நூல்களை இயற்றினர்.

> ' மனிதக் குறிக்கோள் புனித அஹிம்சை ;
> அஹிம்சா தர்மம் அகிலம் ஆக!
> அஹிம்சை வெல்க!'

என்று முதுமை உளறலை முடித்து இந்நூலில் "ஒன்றாக நல்லது கொல்லாமை; மற்றதன் பின்சாரப் பொய்யாமை நன்று" என்ற குறளை காந்தியடிகளின் அஹிம்சைக் கொள்கையாய்ப் பரிணமித்துள்ள தத்துவத்தை விளக்கியுள்ளார். அவர் தம் மரணப் படுக்கையினின்றும் வாய்மலர்ந்தருளிய நூல் 'படுக்கைப் பிதற்றல்' என்னும் பாடல் சான்ற நூலாகும். இந்நூல் வளர்ச்சியின் உண்மையை விளக்கிக் கூறுவது; பிதற்றல் என்னும் பெயரினதாயினும் இந் நூற்பொருள் முக்கனியும் தேனும் சர்க்கரையும் சேர்த்து வடித்தெடுத்து சாறு என்றே கூறலாகும். 'தொட்டனைத் தூறும் மலர்க்கேணி போல' சுந்தரனார் நூல்கள் நாம் கற்பனைத் தூறும் அறிவு. ஆகையால் யாவரும் அவர் தம் கலைச்செல்வங்களாகிய நூல்களைக் கற்றுப் பயன் பெறுதல் நலமாகும்.

---

# 11. தொண்டுச் செல்வர்

தமிழ்ப் பெரியார் சுந்தரனுர், அரசியல் உலகிலும், தொழிலாளர் உலகிலும், தமிழ்மொழி வளர்ச்சியிலும் ஆற்றிய தொண்டுகள் இதுகாறும் விரிவாகக் கூறப் பட்டன. மற்றும் பலப்பல துறைகளிலும் நம் சுந்தர ஞர் மக்களுக்குப் பணிபுரிந்துள்ளார். அவர் வாழ்க் கையே பலதிறத் தொண்டுகளாலாகியது. "வாழ்க் கைக்கு ஏதேனும் ஒரு செல்வம் தேவை. எச் செல்வ மும் பெருத வாழ்க்கை வாழ்க்கையாகாது. என் வாழ்க்கை ஏதேனும் செல்வம் பெற்றதா? என் வாழ்க்கை ஒருவகைச் செல்வம் பெற்றது. அது தொண்டுச் செல்வம்" என்று அவரே தமது வாழ்க் கைக் குறிப்புக்களில் குறித்துள்ளமை ஈண்டுக் கருதத் தக்கதாம்.

சுந்தரனுரின் சமயப்பணியும் சன்மார்க்கத் தொண் டும் பாராட்டத்தக்கவை. அவர் சைவ சமயத்தவரா யினும் ஏனைச் சமய நெறிகளையும் உணர்ந்து அவை கூறும் நல்லறங்களை மக்களுக்கு எடுத்துக் கூறி எம் மதமும் பொதுநெறியையே உணர்த்தும் தத்துவத்தை விளக்கிக் கூறினுர். சுந்தரனுர் யாழ்ப்பாணம் கதிரை வேற்பிள்ளையவர்களிடம் மாணவராக இருந்த பருவந் தொட்டே சமயப் பணியில் பெரிதும் ஊக்கம் கொண் டிருந்தார். மற்றும் ஞானியாரடிகள், ஜஸ்டிஸ் சதாசிவ அய்யர், பூவை கலியாண சுந்தர முதலியார், ஆதிமூல முதலியார் முதலியவர்களின் தொடர்பு நம் சுந்தரனு ரைச் சிறந்த சைவசமயத் தொண்டராக ஆக்கிய தென்னலாம்.

இளமைப் பருவத்திலேயே அவர்தம் தமிழாசிரியர் துணையுடன் இராயப்பேட்டையில் பாலசுப்பிரமணிய பக்தஜன சபையை நிறுவினர். சைவமும் தமிழும் தழைத்தினி தோங்கப் பக்தஜன சபையைப் பல வழியிலும் பயன்படுத்தினர். பின்னர் திருவல்லிக்கேணி சிவனடியார் திருக்கூட்டம் என்னும் சைவ சபையொன்றும் சுந்தரனர் தலைமையில் தொடங்கப் பெற்றது. இங்குக் கூறிய இரண்டு சபைகளுக்கும் தலைவராக இருந்த சுந்தரனர் பெரிய புராணப் பிரசங்கம், திருமுருகாற்றுப் படை—கந்தரனுபூதி பாராயணம் முதலியவற்றைத் தொடர்ந்து நடத்திவந்தார். தூத்துக்குடி சைவ சித்தாந்த சபை, பூவாளூர் சைவசித்தாந்த சபை முதலிய தென்னுட்டுச் சபைகள் சுந்தரனரின் தொடர்பைப் பெரிதும் பயன்படுத்திக் கொண்டன. அடிக்கடி நிகழும் கூட்டங்களில் அவர் சைவ சமயத்தின் சிறப்பைக் குறித்து மிக அழகாகப் பேசுவார்.

தமிழ்ப் பெரியார் திரு. வி. க. தம் வாழ்க்கைத் துணைவியாரை இழந்ததுமுதல் பெண்மையை நினைந்து நினைந்து ஆராய்ந்து ஆராய்ந்து பெண்மையில் தாய்மையும் இறைமையும் கலந்திருக்கும் உண்மையைக் கண்டார். சுந்தரனரின் தூண்டுதலால் மார்த்தா என்னும் அம்மையார் இராயப்பேட்டையில் மாதர் சங்கம் என்னும் கழகமொன்றை ஏற்படுத்தினர். அக்கழகத்தின் சார்பில் அடிக்கடி அவர் சொற்பொழிவாற்றுவதுண்டு. அச் சமயங்களிலெல்லாம் பெண்கள் முன்னேற்றத்துக்கான கருத்துக்களைக் கூறி அவர்களுக்கு அறிவுச் செல்வத்தை வழங்குவார். அறிவுடைய பெண்மணிகள் நாட்டின் கண்மணிகள் என்பது அவர் கொள்கை. அவர் பெண்ணின் சிறப்புக்களை விளக்கிப் பேசிய

பேச்சுகளை, தமிழ்ச்சோலை அல்லது கட்டுரைத் திரட்டு என்னும் நூலில் காணலாம். பெண்ணின் பெருமை என்னும் அவர் நூல் ஆடவர், பெண்டிர் அனைவரும் தம் வாழ்வின் கலங்கரை விளக்கமாக வைத்து எண்ணத்தக்க பெருமை யுடையதாகும்.

பெண்மையைப் புகழும் சுந்தரனார் பெண்களிடம் குறை கண்டால் இடித்துரைத்துத் திருத்தும் எண்ணமும் உடையவர். ஒரு சமயம் அவர் ஆற்றிய சமயச் சொற்சொழிவுக் கூட்டத்தில் பெண்கள் இருந்த பகுதியில் ஒரு குழந்தை வீறிட்டு அழுதது. அம்மகவின் தாய் எவ்வளவு முயன்றும் அழுகை ஓயவில்லை. கூட்டத்தில் இருந்த பெண்கள் அத் தாயை வெறுப்புடன் நோக்கினார்கள். ஆடவர்களும் ஆத்திரம் கொண்டு அப்பக்கம் திரும்பினர். ஆனால் சுந்தரனார் முகத்திலோ அன்பு தவழ்ந்தது. அவர் தம் சொற்பொழிவை நிறுத்தி விட்டுக் குழந்தையின் பக்கம் திரும்பினார்; இரு கைகளையும் நீட்டினார். அவர் நீட்டிய கரங்கள் குழந்தையை ஏந்தும் தாய்மையின் சின்னங்களைப் போலவே விளங்கின. குழந்தையின் அழுகை வரவரக் குறைந்தது. "தாய்மார்களுக்கு ஒரு விண்ணப்பம்" என்று தொடங்கினார் சுந்தரனார். கூட்டத்தில் எங்கும் அமைதி ஏற்பட்டது. "குழந்தையை வளர்ப்பதுதான் பெரிய திறமை; அரிய தொண்டு; அதைவிடச் சிறந்த பேறு இல்லை. குழந்தை, நம்முடைய முருகன்; நம்முடைய கண்ணன். குழந்தையைக் கைவிட்டு எந்தச் சமயமும் வளர வேண்டியதில்லை; எந்தச் சங்கமும் விழாக் கொண்டாட வேண்டியதில்லை. என் சொற்பொழிவை விட, அந்தக் குழந்தையின் வாழ்வே எனக்குச் சிறந்தது. ஒரு குழந்தையின் அழுகையைப் பொறுத்துக்கொண்டு அதைத்

தேற்றத் தெரியாதவர்களுக்கு முருகன் அருள் செய்ய மாட்டான்; கண்ணன் கருணைபுரிய மாட்டான். அவர்களுக்குக் கடவுள் ஏன்? அறம் எற்றுக்கு? சங்கம் ஏன்? இந்தக் குழந்தையின் தாயை நான் மனமாரப் போற்றுகின்றேன். அந்த அம்மையாருக்கு என் அன்பான நன்றி. சங்கக் கூட்டத்துக்கு வரும்போதும் குழந்தையை விடாமல் எடுத்துக்கொண்டு வந்த அந்த அம்மையாரை நான் பாராட்டுகின்றேன். நம் சகோதரிகள் சிலர் 'சினிமா'வுக்குச் செல்லும்போது குழந்தையைத் தனியே வீட்டினுள்ளே விட்டு, வெளியே கதவைத் தாழிட்டுப் பூட்டிக்கொண்டு செல்கின்றனர்கள். அது தாய்மையன்று; அதுதான் பேய்மை! மறுநாள் என்ன ஆகும்? குழந்தைக்கு 104° ஜுரம் அடிக்கும். குழந்தை தனியே இருந்து அலறி அழுத கொடுமை வாளா விடுமா? அதுதான் 104° ஆனது. டாக்டர் வருவார். 'டெலிரியம்' என்பார்; ஊசி ஏற்றவேண்டும் என்பார்; 'இன்புளுவென்ஸா என்பார்; 'டைபாய்ட்' என்பார்; இன்னும் கொஞ்சம் நம்பிக்கை இருக்கிறது என்பார். அந்தோ! அந்தோ!! அதுதான் பேய்மை; தாய்மை அன்று. அந்தத் தாய்தான் 'டெலிரியம்'; அந்தத் தாய்தான் 'இன்புளுயென்ஸா, எமன் எல்லாம்! கொடுமை! கொடுமை! போலி நாகரிகம் தாய்மையை-நம் நாட்டுத்தாய்மையை-தெய்வத் தாய்மையை-கொல்வதை நாம் பார்த்துக் கொண்டிருத்தல் தகுமா? தாய்மார்களே! எண்ணிப் பாருங்கள்!'' என்று கூறினர். உண்மை உள்ளத்தில் இருந்து தோன்றிய உணர்ச்சியின் ஆற்றல்தான் என்னே!

சுந்தரனார் தமிழ் இளைஞர் முன்னேற்றத்துக்காகவும் அரும்பாடு பட்டார். சிறப்பாக மாணவர் இயக்க

மென்றால் அவருக்குத் தனியான மகிழ்ச்சி ஏற்படுவதுண்டு. கூட்டங்களில் அவர் பேசும் சொற்பொழிவுகள் எல்லாம் பெரும்பாலும் இளைஞர்களைத் தட்டி எழுப்பும் உணர்ச்சிமிக்க உரைகளாகவே இருப்பதனைக் காணலாம். இளைஞர்களை ஊக்கி முன்னுக்குக் கொண்டு வருவதைச் சுந்தரனார் தம் கடமைகளுள் தலையாய கடமையாகக் கருதினார். இளைஞர்களும் அவரிடம் தனி மதிப்புக் காட்டிப் பேரன்பு பூண்டொழுகினர். இளைஞர்களே யன்றித் தமிழாசிரியர் நிலையும் மதிப்பும் உயர்வதற்காகச் சுந்தரனார் ஆற்றிய தொண்டு இணையற்றது.

சீர்த்தருத்தப் பணியிலும் நம் திரு. வி. க. தலை சிறந்தவர். கண்மூடிப் பழக்கமெலாம் மண்மூடிப் போக வேண்டுமென அவர் அளப்பரும் சமுதாயப் பணிகளை மேற்கொண்டிருந்தார். அந்நாளில் 'சமபந்தி போஜனம்' என்பது சைவர்களால் மேற்கொள்ளப் படாததாகும். ஆனால் சுந்தரனாரோ கிறிஸ்தவர், முஸ்லீம்கள், ஹரிஜனங்கள் முதலியோர் இல்லங்களில் ஊனுணவு தவிர்த்து ஏனை உணவுகளை மனமகிழ்ந்து ஏற்றுண்பார். திரு. வி. க. ஊனுணவு கொள்வதில்லை. அவர்தம் வீட்டிற்கும் எல்லோரையும் வரவேற்று விருந்தளிப்பார். தீண்டாமையை ஒழிப்பதில் அவர் ஆற்றிய தொண்டு தமிழகத்தில் ஒரு புரட்சியையே உண்டாக்கி விட்டது.

சுந்தரனார், நீதிபதி சதாசிவ அய்யர் துணையினால் கைம்பெண்கள் நலம் போற்றும் கழகமொன்றைக் கண்டார். அக் கழகத்தின் வளர்ச்சிக்காகத் திரு. வி. க. பெரும்பணி புரிந்தார். பின்னர் கணிகையர் நலம் கருதி மாயவரத்தில் '**நாகபாசத்தார் சங்கம்**' என்னும்

கழகமொன்று ஏற்படுத்தப்பட்டது. நம் சுந்தரனார் தேச பக்தனில் எழுதிய கட்டுரைகளே அக்கழகத் தோற்றத்தின் காரணமாக இருந்தன. அக்கழகம் பிற்காலத்தில் **இசைவேளாளர் சங்கம்** என அழைக்கப்பட்டது. அச் சங்கத்தின் உயிர்நாடியாக இருந்து தொண்டாற்றியவர் திரு. மூவலூர் இராமாமிர்தம் அம்மையார் என்பவராவர். அவ்வம்மையாரின் முயற்சிகளுக்கெல்லாம் சுந்தரனார் தமது தேசபக்தனின் மூலம் நல்லாதரவு காட்டினார். 1925-ஆம் ஆண்டில் அம்வம்மையாரின் முயற்சியால் தஞ்சை மாவட்டத்தில் உள்ள கூறை நாட்டில் ஒரு மாநாடு நடைபெற்றது. **திரு. யமுனாபூரண திலகம்** என்னும் அம்மையார் அம் மாநாட்டுக்குத் தலைமை வகித்தார். அம் மாநாட்டிற் கலந்துகொண்ட சுந்தரனார் தமது சொற்பொழிவில் நம் நாட்டில் கணிகையர் எங்ஙனம் தோன்றினர் என்றும், அவர்கள் இசைக் கலை, நாட்டியக் கலை வளர்ச்சிக்கு எங்ஙனம் உறுதுணை புரிந்தனர் என்றும் விளக்கிச் சொல்லி, அவர்களும் ஏனைய பெண்களைப் போலவே மணவாழ்க்கையை மேற்கொண்டு வாழ்தல் நாட்டுக்கு நலம் பயப்பதாகும் என்றும் வற்புறுத்திக் கூறினார்.

அக் காலத்தே **யுவதி சரணாலயம்** என்னும் கழகமொன்று **திரு. திலகம்மாள்** என்பவரால் நடத்தப்பட்டு வந்தது. அக் கழகத்தின் நோக்கங்களாகிய சீர்திருத்த மணமும் கலப்பு மணமும் பற்றித் திரு. வி. க. தம் நவசக்தியில் கட்டுரைகள் எழுதி அவ் வம்மையாரின் முயற்சிகளுக்கு ஆக்கம் தந்துவந்தார். மக்கள் அறியாமையால் பலதார மணம் புரிவதை அவர் வன்மையாகக் கண்டித்தார். இளமை மணத்தை ஒழிப்பதற்கென்றே தோன்றிய **சாரதா மசோதாவைச்** சுந்தரனார் முழுமனதுடன்

ஆதரித்தார். அச்சட்டத்தை மறுத்துப் பேசியவர் களின் வாயடங்குமாறு மேடையிலும்பத்திரிகையிலும் மறுப்புரைகள் வழங்கினர்.

சென்னைத் தங்கசாலைத் தெருவில் உள்ள தென்னிந்திய **ஜீவரட்சா பிரசார** சபையிலும் சுந்தரனர் தொடர்பு கொண்டு உயிர்களை வதைக்கும் கொடுமையைத் தவிர்க்கப் பெரிதும் உழைத்து வந்தார். தெய்வங்களுக்கு முன் பலியிடும் கொள்கையை மறுத்துத் தம் நவசக்தி வாயிலாகப் பல கட்டுரைகள் தீட்டியுள்ளார். இவ்வாறே தம் உணவிலும் உடையிலுங்கூட எளிமையும் சீர்திருத்தமும் பொருந்துமாறு சுந்தரனர் ஒழுகி வந்தமை பாராட்டத்தக்கதே. இங்ஙனம் சுந்தரனர், அன்பர் பணிபுரிவதிலேயே இன்பநிலை கண்டு மகிழ்ந்தார்.

---

# 12. பிற்காலப் பெருவாழ்வு

சுந்தரனுரின் வாழ்க்கைக் குறிப்புக்களைப் படித்தவர்கள் ஜான்சன் வரலாற்றை எழுதிய அறிஞர் பாஸ்வெல்லை நினையாமலிரார். அவர்தம் கவிதைகளில் ஊறித் திளைத்தவர்கள் இராமலிங்க அடிகளையும் தாயுமானவரையும் கபிலர் அகவல் பாடிய கபிலரையும் எடுத்துக்காட்டாகக் கூற நினைப்பர். திரு. வி. க. வின் தமிழறிவின் பரப்பையும், தமிழ்த்தொண்டின் சிறப்பையும் அறிந்தவர்கள் காலஞ்சென்ற பரிதிமாற் கலைஞர், மறைமலை அடிகள், பண்டிதமணி கதிரேசனுர் முதலியவருடன் ஒப்பு நோக்குவர். அவர்தம் சொற்பொழிவை ஒப்புக்காகிலும் ஒருமுறை கேட்டவர்களும், அவரைச் சொற்பொழிவு விற்பன்னர் அண்டோனியோடும், ஆப்ரகாம் லிங்கனேடும் ஒப்பிட விரும்புவர்.

இத்தகைய மெய்த்திருவினை மேவி, 'எத்திசையும் புகழ் மணக்க இருந்த' பெருந் தமிழ்த்தலைவர் இந்நிலையைப் பெறச் சிறிய வயதிலே எவ்வளவு தெளிவாகக் கல்வி பயின்றிருக்க வேண்டும்? திரு. கதிரைவேலர் காட்டிய தமிழார்வம், திரு.வி.க. வைத் தமிழை முறையாக முழுதும் கற்கத் தூண்டியது. சுந்தரனுர் அவரிடம் யாப்பிலக்கணத்தைக் கற்றுர். திருக்குறளை அதில் வல்லரான திரு. சிதம்பரனுரிடமும், சைவாகம நூல்களை மயிலை மகாவித்வான் தணிகாசலனுரிடமும் பயின்றுர். சங்க இலக்கியங்களில் சிலவற்றை மறைமலையடிகளொடு கலந்து படித்தார். சிவப்பிரகாச சுவாமிகளிடம் சித்தாந்த வேதாந்த நூல்களைக் கற்றுத் தேறிய

திரு. வி. க. மருவூர் திரு. கணேசனூர், கடலங்குடி திரு. நடேசனூர், வெஸ்லி கல்லூரித் தெலுங்கு மொழியாசிரியர் கிருஷ்ணனூர் முதலியவர் தொடர்பால் வடமொழி நூற்கருத்துக்களையும், திரு. கிளின்பார்லோ, ரென். ரோலோ போன்ற பேராசிரியர்களின் சொற்பொழிவுகளைக் கேட்டுக் கேட்டு ஆங்கில நூற் கருத்துக்களையும் அறிந்துகொண்டார். தேனீயைப்போல் அறிஞர்களாகிய மலர்தொறும் சென்று சென்று, கல்வியறிவாகிய செழுந்தேனை வாரி வாரி அருந்திப் பழகிய பழக்கமே அவர்தம் தமிழ்த் தொண்டின் சிறப்பிற்குக் காரணம்.

சுந்தரனூரின் தமிழ்ப்பற்றையும் வளமான நடையையும் திருக்குறள் விரிவுரைவழி யுணர்ந்த ஜெர்மானிய அறிஞரான திரு. பெய்தான் என்பவர் அப்பெரியாரை ஜெர்மன் பல்கலைக்கழகத்தில் திருக்குறள் போதகாசிரியர் பதவி யேற்றுத் தொண்டாற்ற வருமாறு வேண்டியழைத்தார். 'திறமான புலமை எனின் வெளி நாட்டார் அதை வணக்கம் செய்தல் வேண்டும்' என்னும் பாரதியார் வாக்குக்கு இணங்கத் திரு. வி. க. திறமான புலமை பெற்றவரானூர்; ஆனல் தமிழகம் விட்டு வெளியே செல்ல விழைந்திலர். "கற்ருேர்க்குச் சென்ற விடமெல்லாம் சிறப்பு" என்பது ஔவையார் அமுத மொழியாகும். சுந்தரனூர், பிறந்த-வாழ்ந்த நாட்டிலேயே ஈடுமெடுப்புமில்லாத பெரும் புகழ் பெற்ருர். திரு. வி. க.வை அறிஞர். திரு. கீ. இராமலிங்கனூர் 'தமிழ்நாடு' என்றும், திரு. கி. ஆ. பெ. விசுவநாதம் '**நூல் நிலையம்**' என்றும் உருவகித்து உரைத்தமை பொருத்தமான உண்மையேயன்ருே? தமிழ்நாடாகவும் நூல் நிலையமாகவும், தமிழ் முனிவராகவும் விளங்கிய எழில் உருவினர்—செந்தண்மை பூண்ட அந்தணர்—

தந்நலமற்ற தமிழ்த் தொண்டர்—சுந்தரனாரை எப் பெயரால் சிறப்பித்தாலும் தகும். திரு. வி. க. தமிழ் ஆலமரம் போல வாழ்ந்தார்.

> "தெள்ளிய ஆலின் சிறுபழத் தொருவிதை
> தெண்ணீர் கயத்துச் சிறுமீன் சினையினும்
> நுண்ணிதே ஆயினும் அண்ணல் யானை
> அணிதேர்ப் புரவி ஆட்பெரும் படையொடு
> மன்னர்க்கு இருக்க நிழலவாது" போல,

மிகச் சிறியதொரு குடிசையிற் பிறந்து வளர்ந்து, மெலிந்த உருவினரான திரு. வி. க., தமிழகத்தில் எத் துணையளவிற்குத் தம் அறிவு நிழல் அளித்தார்! அவர் நிழலில் தங்கி இளைப்பாறி மகிழ்ந்தவர் எத்துணைபேர்! அவர்தம் உழைப்பாம் கிளைகளும், தொண்டாம் விழுதுகளும் பரந்து ஊன்றிய இயக்கங்கள் எத்தனை! எத்தனை! ஆலம்பால் விரும்பிக் கல்லால் அடிப்பவர் பலராதல் போல, அவர்தம் அறிவுப்பால் விரும்பிச் சொல்லால் அடித்தவர் எத்துணைபேர்! ஆலிலை பறித் துப் பயன் கண்டார் பலராதல்போல, அவர்தம் கட் டுரை இலைகளைத் தத்தம் இதழ்களிலும் நூல்களிலும் வெளியிட்டுப் பயன் கண்டார் எத்துணைபேர்! "குறைக் குந்தனையும் குளிர் நிழலைத் தந்து கதிரவன் சூட்டை மறைக்கும்" ஆலமரம் போல, திரு. வி. க. தம்மைக் காய்ந்து வைதாரையும் வாழவைத்த திறம் வியக்கத் தக்கது அன்றோ?

"தீவளியால் நற்காய் உதிர்தலும் உண்டு" எனின் பழுத்து முதிர்ந்த கனிகள் காலவிதிக்குட்பட்டு உதிர்தலில் வியப்பில்லையன்றோ? முதிர்ந்த வயதில் கண்ணொளி இழந்த சுந்தரனார் பல நாட்களாய்ப் படுக்கையில் இருக்க நேர்ந்தார். சென்ற 1953-ஆம்

ஆண்டு செப்டம்பர் மாதம் 17-ஆம் நாளிரவு 7-45 மணிக்கு, அந்தகன் நம் தமிழாலமரத்தைத் தகர்த்து விட்டான். ஆம்! திரு. வி. க. வாழ்வு அன்று முடிந்தது. அவரை நம்பியிருந்த தமிழர் நெஞ்சில் அவலச் சுவை ஊற்றெனப் பெருகிவிட்டது ; மீண்டும் தமிழ் ஆலமரத்தை எங்கே காண்போம் என்று ஏங்குகின்றார்கள் தமிழ் மக்கள்! என்செய்வது, அழுது அரற்றுவதைத் தவிர?

> "மண்அழும்; நீர் தீ அழும்; கால் வான் அழும்; ஏழ்
> கிரியழும்; அவ்வானோர் தங்கள்
> எண்ணமும், மற்றுள்ளனவாம் எப்பொருளும்
> அழும்; புலவர் இறந்தால் என்னும்
> வண்ணவுரைக்(கு) இலக்கியம் நீ வானவர்கூ
> ளாமணிபால் வயங்கும் நிற்(கு) எம்
> கண் அழுத நீரும் ஒரு கடலாகும்;
> வேனில் அதைக் கறுத்த(து), அந்தோ!"

என்று சுந்தரனாரின் தமிழ்ப் பேராசிரியர் திரு. கதிரைவேலர் மறைவு கேட்டுத் திருவத்திபுரம் ஸ்ரீலஸ்ரீ. ம.தி. பானுகவியடிகளார் அழுது அரற்றிய பாடலையே, திரு. வி. க. வின் பிரிவிற்கு மக்கள் அழுத நிலையை விளக்கும் இரங்கற்பாடலாக எடுத்துக் காட்டலாம்.

இறவாத புகழ்பெற்ற தமிழ்ப்பெரியார் திரு.வி.க. மறைந்ததற்காக வருந்திய நண்பர்கள், தத்தம் இறுதி மரியாதையைச் செலுத்த அவர் இல்லத்திற்கு, இரவு முதலாக வந்தவண்ணம் இருந்தனர். அவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் திருவாளர் டாக்டர். மு. வரத ராசனார், தெ. பொ. மீனாட்சிசுந்தரனார், ஈ. வே. ரா., ச. சச்சிதானந்தம் பிள்ளை, மாநில முதலமைச்சர் இராஜாஜி, சட்டசபைத் தலைவர் ஜே. சிவஷண்முக

ஞர், டி. செங்கல்வராயஞர், டாக்டர் P. வரதராஜுலு. டாக்டர். பி. நடேசஞர், போலீஸ் கமிஷனர் பார்த்த சாரதி, ம.பொ.சி., டி. கே. சண்முகம் முதலியோராவர். மறுநாள் சவ ஊர்வலத்தில், தமிழ்நாட்டுத் தலைவர் களும், தொழிலாளர்களும்; இளைஞர்களும், பெண்மணி களும், கண்ணீரும் கம்பலையுமாய்த் திரண்டுசென்றனர்.

தொழிலாளர்கள் பல்லாயிரக் கணக்கில் திரண்ட னர். பொதுமக்கள், மொழி, சாதி, சமய வேறுபாடின் றிக் கூடினர். சைவர்கள், திரு. வி. க. வின் உயிர் அமைதியுறுவதற்காகத் திருவாசகமும் தேவாரமும் பாடியவண்ண மிருந்தனர்.

தொழிலாளர்க்குத் திரு. வி. க. செய்த தொண்டு மிகப் பெரிது அன்ருே? ஆதலின் பெரம்பூர் பேரக்ஸில் உள்ள சென்னைத் தொழிலாளர் கழகத்திற்குத் திரு.வி. க. வின் பொன்னுடல் கொண்டுபோகப்பட்டு அனை வரும் பார்க்க வசதியாக வைக்கப்பட்டது. பின்னர் பிற்பகல் 3 மணிக்கு அவர்தம் திருவுடல் ஊர்வல மாகக் கொண்டு செல்லப்பட்டது. பெருவெள்ளம் போன்ற தமிழ் மக்கள் கூட்டம் தொடர்ந்து வர ஊர் வலம் பெரம்பூரிலிருந்து புறப்பட்டு, வேப்பேரி வழியா கச் சிந்தாதிரிப்பேட்டை யூடே சென்று நேப்பியர் பூங் காவை அடைந்தவுடன், வானும் திரு. வி. க. வின் பிரி விற்கு வருந்தி மழைக் கண்ணீர் பொழிந்து தன் துயரை வெளிப்படுத்தத் தொடங்கிற்று. ஊர்வலம் சிறிது தடையுற்று நின்றது.

ஊர்வலம் பாலசுப்ரமணிய பக்தஜன சபையை அடைந்தது. திரு. வி. க. வின் முயற்சியால் ஏற்பட்ட அச்சபையில் அவர்தம் திருவுடல் சிறிது நேரம் அன்பர் கள் பார்வைக்காக வைக்கப்பெற்றது. பல கழகங்களின்

சார்பில் மாலைகள் அணிவிக்கப் பெற்றது; வழிபாடும் நிகழ்ந்தது; திரு. வி. க. வின் திரு உடலைத் தாங்கிய பொறிவண்டியின் இருமருங்கிலும் சுந்தரனாரின் தொடர்பு பெற்ற பல பிரிவினரும் அவரவர் கொடிகளை அணியணியாகத் தாங்கிச் சென்றனர். ஏறத்தாழ ஒரு மைல் நீளத்திற்குக் கவலைதோய்ந்த முகத்தினராய் அன்பர்கள் செறிந்து, திரள்திரளாகப் பின்தொடர, மாலை 6-45 மணிக்கு மயிலை மயான நிலையத்தை ஊர் வலம் அடைந்தது. அங்கு ஊர்வலத்துக்கு முன்னரே ஆயிரக்கணக்கில் மக்கள் குழுமியிருந்ததால், கூட்டத்தைச் சமாளிப்பது பெருங் கவலையாயிருந்தது.

இறுதியாக ஈமத்தின் மேல், தமிழகம் எங்கும் ஓடியோடி ஏழைக்கும் தமிழுக்கும் இனிதுழைத்த எழிலுருவம்—திரு. வி. க. வின் உடலம்—கிடத்தப் பெற்றுக் கங்கை நீரால் தூய்மை செய்யப் பெற்றது; கற்பூரம் சந்தனக் கட்டை முதலியன வைக்கப்பெற்று, அவர் விரும்பிய வண்ணம் இறுதிச் சடங்குகள் எதுவுமின்றி எரியூட்டப்பட்டது. எரியூட்டுமுன் திரு. வி. க. வின் உடலுக்குத் தமிழ் எழுத்தாளர் சங்கம், நாடகக் கழகம் முதலிய பலப்பல கழகங்கள் மலர்மாலைகள் சூட்டிக் கண்ணீர் தெளித்தன. "திரு. வி. க. வாழ்க, திரு. வி. க. புகழ் ஓங்குக!" என்ற பேரொலியை மக்கள் உணர்ச்சியுடன் விண்முட்ட ஒலித்தனர். இரவு 7 மணிக்கு எரிமண்டித் திரு. வி. க.வின் பொன்னுடலைத் தழுவியது. மறுநாள் கடல் ஒத்துப்பரந்த புகழுடைய பேரறிஞராகிய சுந்தரனாரின் எலும்புச் சட்டகம் கடலிடையே கலக்கப்பெற்றது.

> "உள்ளத்தால் பொய்யாது ஒழுகின் உலகத்தார்
> உள்ளத்துள் எல்லாம் உளன்"

என்ற குறளுக்கு ஏற்பச் சுந்தரனுர், உள்ளத்தால் பொய்யாது ஒழுகி, உலகத்தார் உள்ளத்துள் எல்லாம் புகழ் மணத்துடன் பொலிகின்ருர். திரு. வி. க. வின் வாழ்வு வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்த வாழ்வு! பெருவாழ்வு! ஆதலின், சுந்தரனுர் வானுறையும் தெய்வத்துள் வைக்கப்படுதல் ஒருதலை. தமிழ்ப் பெரியாரின் திருப்பெயர் தமிழ் மொழியும் தமிழர்களும் உள்ளளவும் மறையாதென்பதில் எள்ளளவும் ஐயமில்லை. தமிழ்ப்பெரியார் திருப்பெயர் தரணியில் வாழ்க!

---